உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கீழப்பூங்குடியில்

திருவருட் சமாதிகொண் டெழுந்தருளியிருக்கும்

# இராமைய சுவாமிகள்

என்னும்

# ஸ்ரீ மிளகாய்ச் சுவாமிகள்

## புராணம்.

இஃது

ஆலங்காடு தமிழ்ப்பண்டிதர்

வை. செல்லையாப் பாவலரால்

இயற்றப்பெற்று

---

கீழப்பூங்குடி மிளகாய்ச் சுவாமிகோவில் தேவஸ்தானம்

டிரஸ்டிகளாகிய

திருவாளர்.

கூ. கரு. நா. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்கள்

திருவாளர்.

கூ. அரு. க. வயி. வயிரவன் செட்டியாரவர்கள்

ஆகிய இவ்விருவர்களின் நன்முயற்சியால்

---

மதுரை, மீனலோசனி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

 1931. [விலை ரூ 1.

உ

சிவமயம்.



விநாயகர்.



இராமலிங்கம்.
(மூலஸ்தானம்.)



சுப்பிரமணியர்.



நந்தி.



இராமைய அடிகள்
(உற்சவமூர்த்தி.)

சிவமயம்.

# பொருளடக்கம்.







ஸ்ரீ

# முகவுரை.



'தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே' என ஔவைப் பிராட்டியாரருளியபடி ஈசன் பெருமையினும் அவன்றன் மெய்யடியார் பெருமை பன்மடங்கு மிகுந்தது என்பது ஆஸ்திகராயினர் அனைவர்க்கும் உடன்பாடான தொன்றேயாம். இவ்வுண்மையைச் சூரியனது வெப்பத்தைப் பொறுத்துக்கொண்டாலும், அவனுடைய கதிர்களால் வெப்பமுற்ற மணல், இரும்பு போன்ற பொருள்களின் வெப்பத்தைப் பொறுத்தல் அரிதாயிருக்கின்றதென்னும் திருஷ்டாந்த முகத்தால் நன்கு அறியலாகும். மேலும் சைவசமய குரவர் நால்வரில் ஒருவராகிய ஆளுடைய நம்பிகளின் பொருட்டாக, எப்பொருட்கும் இறைவனாகித் தேவர்கள் முதலிய யாவரையும் ஏவல்கொள்ளும் ஈசனை நள்ளிருட்போதில் பரவை நாச்சியாரின் வீட்டுக்குத் தூது செல்ல இசைந்தருளினன் என்றமையாலும், இன்னும் அதுபோன்ற பல சற்சரிதங்களாலும் ஆண்டவன் தன்னுடைய புகழ்த்திறம் பேசும் அடியார்களுக்குள் அடக்கம் என்பது இனிது விளங்கும்.

ஆகவே, ஈசனைத்தமக்குள் அடக்கமாக்கிய மெய்யடியார்கள் பெருமையை நினைத்தலும் கூறுதலும், அவனை நினைத்தலும் வாழ்த்தலும் போலாகும் என்பதிற் சிறிதும் ஐயுறவில்லை. ஆயினும் அத்தகைய உத்தமத் தொண்டர்கள் அக்காலத்துப் போலவே இக்காலத்தும் 'உளரோ, இலரோ?' என்று சந்தேகித்துக் கூறுதலோடு நில்லாமல் 'இக்காலத்திற் பரம்பொருளின் வயப்பட்டு அவனருள் பெற்ற பெரியார்கள் இல்லை'யென்றும் துணிந்து சாதிக்கும் இயல்பினராகிய பேதைமதியினர் நிறைந்தது இவ்வுலகம். ஆதலின் அவர்கள் வாயடங்கும் பொருட்டும், அஞ்ஞானம் என்னும் இருளிற்பட்டுக் காமக்குரோதாதிகளாகிய அறுவகைப் பகைவர்களால் அடியுண்டு வருந்தி யுழலும் உலகத்தவர் உய்யுமாறும் இருள்போக்கும் இரவியே போல அவ்வப்போது திருவவதாரம் செய்யும் பெரியார்கள் பலர். அவர்களில் ஸ்ரீ மிளகாய்ச் சுவாமிகள் என வழங்கும் இராமைய சுவாமிகளும் ஒருவர் ஆவார்கள். அவர்களுக்கு மிளகாய்ச் சுவாமிகள்

என்னும் பெயர்வந்த காரணமும், அவர்கள் எளிதிற் செய்தருளியபல அரிய பெரிய அற்புதச் செயல்களும் இந்நூலில் விளங்கக் கூறப்பட்டிருக்கின்றன. அவர்கள் இராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்த கீழப்பூங்குடியெனப் பெயர்பெறும் பூமனகரத்தில் திருவருட் சமாதி கொண்டெழுந்தருளி யிருக்கின்றார்கள்.

இத்தகைய பெரியாரின் மெய்ச்சரிதையைப் பாடிய பாவலர், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவானும், மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் சைவநூற் பரிசோதகரும், சேற்றூர்ச் சமஸ்தான வித்துவானுமாயிருந்த மு. ரா. சுப்பிரமணியக் கவிராயர் அவர்களின் மாணாக்கரும், செந்தமிழ்ப்பானுப் பத்திராதிபரும், ஆலங்காடென்னும் பதியினரும், தமிழ்ப் பண்டிதருமாகிய சைவத்திருவாளர். வை. செல்லையாப் பாவலர் அவர்கள் ஆவார்கள். இப் பாவலர் அவர்கள் ஸ்ரீ மிளகாய்ச் சுவாமிகள் சரித்திரத்தைச் சென்ற வாண்டு அமிழ்தினும் இனிய செந்தமிழ் உரை நடையில் வரைந்து வெளியிட்டுள்ளார்கள்.

அந்த உரை நடைநூல் சாமானியமான கல்வியறிவுடையாரும் சுவாமிகள் சரிதையை அறிந்துகொள்ளுதற்கு ஏற்ற சாதனமாயினும் நறுந் தமிழ்மொழியில் அருந்திறல் வாய்ந்த கவிவாணரும் மனக் களிப்புடன் கற்றுணர்ந்து இன்பமும் பக்தியும் எய்தவேண்டு மென்னும் விருப்பினால் இப்போது இப்பெரியார் வரலாற்றை விருத்தப் பாக்களால் பாடிமுடித்துள்ளார்கள். இதனை முழுதும் மனக்களிப் போடு இருமுறை படித்து இன்புற்றேன். இந்நூல் கற்றோரும் மற்றோரும் பயனெய்துமாறு இனியநடையில் செம்பாகமாயமைந்து புராணத்துக்கேற்ற முக்கியமான உறுப்புக்களோடு சுருங்கச்சொல்லல் விளங்கவைத்தல் ஆகிய எல்லா அழகுகளும் நிறைந்து விளங்குகின்றது. மேலும் இந்நூற் செய்யுட்கள் சந்தர்ப்பத்துக்கேற்ற சந்தத் தோடும், விஷயத்துக்கேற்ற சொற்களோடும் ஆற்றொழுக்காக அமைந்துள்ளன. இக்காலத்துச் செய்யுள்நூல்களைப் பாடுவோர் சிலரே; அவரினும் நல்ல செய்யுட்கள் பாடுவோர் மிகச்சிலரே யாவர்: இந்தப் பாவலர் அவர்கள் சங்ககாலத்து இலக்கிய இலக்கணங்களையும்

பிற்காலத்து இதிகாச புராணங்களையும், சைவசித்தாந்த சாத்திரங்களையும் தக்க ஆசிரியர்பாற் கற்றுணர்ந்திருப்பதோடு இன்சுவையுள்ள பாக்களையும் பாடும் ஆற்றலும் அமைந்திருத்தல் பெரிதும் பாராட்டத்தக்கதேயாம்.

இந்தச் சுவாமிகள் புராணத்தைப் பாடுமாறு பாவலரவர்களை வேண்டியவர்கள் கிழப்பூங்குடியில் வசிக்கும் உயர்தனவைசிய குலதிலகர்களாகிய திருவாளர். கூ. கரு. நா. சிதம்பரம் செட்டியார் அவர்களும், திருவாளர். கூ. அரு. க. வைரவன் செட்டியார் அவர்களும் ஆவார்கள். இன்றமிழ் மொழியையும், அம் மொழியில் வல்ல புலவரையும் பொன்னேபோற் போற்றிய மன்னரும், பிரபுக்களும் முற்காலத்திற் பலர் நம் நாட்டில் இருந்தனரேனும், அங்ஙனம் உண்மையாகப் பாவலரைப் போற்றுவார் சுருங்கிய இக்காலத்தில், இக் கொடையாளர்கள் இருவரும் இந்தப் புராணத்தைப் பாடுவித்ததால், இவர்கள் தமிழினிடத்தும் தமிழ்ப் புலவரிடத்தும் கொண்ட அபிமானமும், பெரியாரிடம் கொண்ட பக்தியும், பிற நற்குணங்களும் வெள்ளிடை மலைபோற் றெள்ளிதின் விளங்கும்.

இப்புராணத்தை இயற்றிய பாவலர் அவர்களுக்கும் தனவைசிய குலதிலகர்களாகிய இவ்விரு வள்ளல்களுக்கும் இத்தகைய பல நூல்களை இயற்றுவிக்கும் நல்லெண்ணத்தையும், நோயற்ற நீடிய ஆயுளையும், சீரையும், சிறப்பையும் தந்தருளுமாறு எல்லாம்வல்ல இறைவனைத் திரிகரணங்களாலும் திரிகாலத்தும் இறைஞ்சுகின்றேன்.

நெ. ரா. சுப்பிரமணிய சர்மா,
பசுமலை உயர்தர போதனுமுறைக் கலாசாலைகளின்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர்.

பசுமலை
13—9—31.

உ

சிவகுகமயம்.

# சாற்றுக் கவிகள்.

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான் மகா-ள-ள-ஸ்ரீ
மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள் பாடியவை.

உலகிலுயர் தமிழைமுன்னா சிரியராங் குறுமுனிவர்க்
குபதே சித்த
நலமலியும் பிராணெனும்போர் புரிபுலவ ராதியநன்
னாவ லோர்கள்
பலர்பயிலும் பாண்டிநாட் டினிற்சகல சம்பத்தும்
படைத்து நாளும்
இலகிடும்பூங் குடிநகர்வாழ் தனவணிகர் குலதிலக
னென்னு மேலோன். (1)

அரியகல்வி கேள்வியறி வமைந்தனபோ லொழுக்கமிக
வமைய நின்ற
பெரியவன்யார் கண்டாலுங் கதியளிக்குஞ் சிதம்பரப்பேர்
பெற்றோ னன்னான்
உரியமனங் கோயிலாக் கொண்டருளும் பெருந்துறவி
யூர்தோ றும்போய்த்
தெரியவுயர் பற்பலவற் புதமியற்றுந் தவமிகுந்த
சில ஞானி. (2)

பெற்றோரா விட்டவிரா மையனெனும் பெயர்புணர்ந்து
பிறங்கி யென்றுந்
தற்றேறுமி லாதவன்றன் செயுஞ்செயலா லேமிளகாய்ச்
சாமி நாமம்

உற்றோன்றன் சரிதத்தை வசனநடை யாவரைந்திவ்
    வுலகந் தேற
முற்றோன்ற லாவிடுத்துப் பிற்றோன்ற லாகமிக
    முதிரு மன்பால். (3)

சொன்னலமும் பொருணலமு முறவொர்சிறு புராணமாத்
    தொகுத்துப் பாடிக்
கன்னலமு தினுமினிக்கப் படிப்பார்கேட் பாரிதயங்
    களிக்கத் தந்தான்
அன்னவன்யா ரெனிற்சோழ நாட்டினு லங்காட்டி
    னமர்வே ளாள
பொன்னவுயர் தருகங்கா குலத்துதித்த நலத்தின்விளங்
    கிணையி லாதோன். (4)

வித்தியா தானநல்குந் துறைசையா தீனத்து
    வித்து வானும்
பத்தியார் சேற்றூர்ச்சுப் பிரமணிய நாவலன்பாற்
    பற்பன் னூலும்
நத்தியா தரவுடன்கற் றதிமதுர கவிபாடு
    நயம்பெற் றோங்குஞ்
சித்தியார் செல்லையாப் பாவலனுந் திசையளக்குஞ்
    சீர்த்தி யோனே. (5)

---

மதுரை அமெரிக்கன் காலேஜ் தலைமைத்தமிழ்ப்பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ
ஆ. கார்மேகக் கோன் அவர்கள் இயற்றிய
நேரிசை வெண்பா.

---

மிளகாய்ச் சுவாமிகள்தம் மெய்ச்சரிதை தன்னை
அழகாகப் பாடி யளித்தான்—உளமதனிற்
சொல்லையா ராய்ந்துமிகத் தோமில் கவிபாடுஞ்
செல்லையாப் பாவலவன் தேர்ந்து.

## மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை ஆசிரியர் மகா-ள-ள-ஸ்ரீ
## சு. நல்லசிவன் பிள்ளை யவர்கள் பாடியவை.

---

### எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சந்தமார் கீழப் பூங்குடி யூரிற்
சமாதிகொண் டருளிய தவஞ்சால்
விந்தையுார் பெரிய விராமைய நாம
வித்தகன் சரிதையை விரித்தான்
சிந்தையார் வழுட னலங்காட் டூரிற்
செந்தமிழ்த் திவாகர னெனும்பேர்
வந்தபத் திரிகை தருசெல்லை யாப்பா
வலன்புவி மகிழ்ந்திட மாதோ. (1)

### பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்பூத் தலர்ந்த விதழியந்தார்ப் புத்தே ளடியர் பொருவறுசீர்
போத வகில மறியும்வணம் புரிவெண் சித்தி முதலாய
இன்பூத் தரிய வற்புதங்க ளிழைத்த பெரிய விராமையன்
இணையில் கதையைக் கத்தியத்தா லீந்தான் முன்ன ளிந்நாளின்
மின்பூத் தொளிருஞ் சடாமகுட விமல னருளாற் செய்யுளினால்
விழைந்து புலவ ரமிழ்தமென வேலை யுலகிற் குவந்தளித்தான்
தென்பூத் தளகை யெனநிதியந் திகழு மாலங் காடெனுமூர்ச்
செல்லை யாப்பா வலநாமஞ் சிறந்து விளங்குஞ் சீரியனே. (2)

தரைகா வலரும் புகழுநிதி தழைத்த கீழப் பூங்குடிவாழ்
தனவை சியர்தந் திருமரபிற் சாந்தந் தருமந் தமவென்னும்
உரைசால் பெருமைச் சிதம்பரவே ளுடன்வை ரவப்பே ருறுவேளும்
உயர்மா தவத்த விராமைய னொருமா சரிதை யுரைத்திடெனத்
திரையார் புவியிற் பலவளனுஞ் சிறந்த வாலங் காடெனும்பேர்ச்
செய்ய நகரி னினிதுறைவோன் செல்லை யாப்பா வலநாமன்
வரையா தளிக்கு முபர்வேளாண் மரபி லொருநன் மணிபோல்வான்
யாக்கு நயமும் பொருணயமு மலியப் பாவால் வழுத்தினனே. ()

# மதிப்புரை.

கீழப்பூங்குடி வாழவந்தருளி, ஆங்குச் சமாதிபூண்டுள்ள மிளகாய்ச்சுவாமிகள் என்ற இராமையசுவாமிகளின் புகழ்ச்சரிதையை முன்னம் வசனமாக வரைந்து வழங்கிய செல்லையாப் பாவலரே அதனை மீண்டும் புராண முறையில் பாடித்தந்துள்ளார். நல்லாரைக் காணும்பேறு இடையாதார்க்கும் நல்லார் குணங்களுரைப்பதுவும் நன்றேயன்றே? மிளகாய்ச் சுவாமிகளின் அருட்பூதி வாழ்வும், அப்பெரியார் தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளராய் பலருக்கும் பல்லாண்டு அருளாற்றி விளங்கிய பெருமையும் செட்டிநாடும் செம்பிய நாடும் நன்கறிந்தவை அப்பெரியார் புகழ்ப் புனித சரிதையைத் தமிழரும் தமிழ்வாணரும் ஒருங்குணர்ந்து சிந்தித்துப் பயன்பெறச் செய்யும் நன்னோக்கம்கொண்ட பூ'மனகர் தனவணிகர் குலதிலகராய் விளங்கும் திருவாளர். கூ. கரு. நா. சித. சிதம்பரஞ் செட்டியாரவர்களும், திருவாளர். கூ. அரு. க. வயி. வயிரவன் செட்டியாரவர்களும் விரும்பியாங்குப் பாவலரவர்கள் கத்தியரூபமாகவும் பத்தியரூபமாகவும் அதைப்புனைந்து வழங்கியுள்ளார்கள். பாவலரவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தில் தமிழ்பயின்று சிறந்ததோடு, பொருளொடு அருள்நிதியு மொருங்கு வளர்க்கும் நகரத்தார் நற்குடிப்பிறந்து, வடவாரியம் தென்தமிழ் இருமொழியிலும் வல்லுநராய் விளங்கும் பண்டிதமணி திருவாளர். மு. கதிரேசச் செட்டியாரவர்களின் மதிப்புரையும் நேசமும் பெற்றுள்ளார்க ளென்பதொன்றே அவர்களின் தமிழ்ப் புலமைக்குப் போதியசான்றாகும். இனி உரிய கல்விப்பெருக்குக்கு அமைய அடியவர் திறத்தன்பும் கனிந்துநிற்கும் பாவலர், பொன்மலர் நாற்றமும் படைத்ததென ஆண்மக னடைதற்குரிய நலமலர்ந்த செவ்விய வாழ்வுடையார். இவர் நற்கல்வி பூத்து முன் காய்த்த "வசனச்சரிதை" தற்போது மலர்ந்ததாகும் இவர் செய்துள்ள இப் புராணம். தவாது தங்கருமமாற்று மெய்த்தவ வொழுக்கமும், உயர்

உ

# மதிப்புரை.

குடிப்பிறப்பும், அறத்தோடாகி அறம்வளர்க்கும் பொருட் செல்வப் பெருக்கு மொருங்கமைந்த பூமனகர் தனவணிக குலதிலகரான பெருந்தகையார் இருவரு மிப்பாவலரின் தகுதிகண்டு, அறத்தொடு வாழ்ந்தடங்கிய குணப்பெருங் குன்றும் இராமைய சுவாமிகளின் புகழ்க்கதையை இவரால் புனைந்து தமிழருக்கு வழங்கிய வள்ளன்மை பாராட்டற்பாலதாகும். நேரில் நான் முன்னறியாத இப்பெரியார் இத் தமிழ்ப்புராணத்திற்கு மதிப்புரை வரைந்துதவ வேண்டுமென விரும்பியது, அன்னவர் பெருந்தகைமையை விளக்குமன்றி, என் தகுதியைக் குறிப்பதன்று. அன்றியும் பண்டிதமணியின் மதிப்புரை பெற்றபாவலரை, என் பெருமதிப்பிற்குரிய தமிழ்ப் பெரும்புலவரும் திருப்பரங்குன்றப் புராண உரை ஆசிரியருமான திருவாளர். மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள் அழைத்துவந்து அறிமுகப்படுத்தியபின், இப்பாவலர் தமிழ்ப்புலமைக்கு நானும் நற்சான்று பகர விழைவ தியல்பே யாகும். அறமாற்றுந் தாளாண்மையற்றார் தற்காலம் கேவலம் தவவேடம்பூண்டு தன்னலம் வளர்ப்பவர்போ லன்றி, மெய்த் தவவித்தாய், மக்கள் நலம் வளர்த்தலையே தலைசிறந்த அறமாகக் கொண்டு நோற்று அநுபூதி பெற்றடங்கிய பெரியாராகிய மிளகாய்ச் சுவாமிகளின் மாசற்ற மெய்ச்சரிதம் தமிழர் யாவரும் அறிந்து பயனடைய வேண்டுவ தென்பது யாவருக்கும் ஒப்பமுடிந்த உண்மையாகும். அத்திருவினையைப் பாவலரவர்கள் இனிதாற்றி யுள்ளாரென்பது அன்னவர் செய்துள்ள சரித புராணங்கள் தெளிவிக்கின்றன. இனிய எளிய தமிழ் நடையும் கவிநலமும் இப்புராண மிகவுடைத்து. இத் தகைய தமிழ்த்தொண்டும் சமுதாய சேவையும் தமிழகத்தில் நாளும் பெருகுமாறு பூங்குடி வணிகப்பெரியாரின்னும் அறநித மாற்றுக. அன்னவர் அறநிதி வளமும், பாவலர் தமிழ்ப் புலமையும் நாளும் வளர்ந்திடுக.

இங்ஙனம்,

பசுமலை.
19—9—31

ச. சோமசுந்தர பாரதி,
உயர்தர நீதிமன்றவாதி.

உ

சிவகுகமயம்.

திருச்சிற்றம்பலம்.

கீழப்பூங்குடி யெனும் பூமனகரத்தில்

திருவருட் சமாதிகொண் டெழுந்தருளியிருக்கும்

இராமையய சுவாமிகள் என வழங்கும்

# ஸ்ரீ மிளகாய்ச் சுவாமிகள்

# புராணம்.

## பாயிரம்.

சசிவர்ண விநாயகர் வணக்கம்.

திருமருவும் அகரமென வுயிர்க்குயிராய் உலகமெலாஞ்
செறிந்தெஞ் ஞான்றும்
பெருமருவும் பிரணவத்திற் பேசுமநும் பொருளாயெப்
பேறும் நல்கி
அருமருவு மருளொளியாய்ப் பூமனக ரெனும்பதியி
னமர்ந்து நாளுங்
கருமருவா தடியவருக் கருள்சசிவர் ணக்களிற்றைக்
கருத்துள் வைப்பாம். (1)

குமரவேள் வணக்கம்.

தாரகத்தி னுட்பொருளைத் தனையடைந்தோர்க் கருந்துணையைத்
தரும வேற்றார்
ஆரகத்தஞ் சடைப்பெருமா னங்கிவிழி தனிற்றோன்றி
யாரன் மாதர்
சீரகத்தின் றிருமுலைப்பா லருந்திநறுஞ் சரவணத்திற்
றிகழ்ந்தெஞ் ஞான்று
மோரகத்தார் பூமனகர் மேவுமறு முகப்பெருமா
னிணைத்தாள் போற்றி. (2)

மெய்கண்ட தேவர்,

பஞ்சாக்கர தேசிகர் வணக்கம்

(கட்டளைக் கலித்துறை)

இருவினை மும்மல நீக்கிச் சிவானந்த மீந்தருளுங்
குருபரன் மெய்கண்ட தேவன் பதாம்புயங் கொண்டுளத்தே
திருவுடை யார்தொழுங் கோமுத்தி ஞான தினகரனும்
அருளுடைப் பஞ்சாக் கரதே சிகனை யடைகுதுமே. (3)

---

உலகநாத சுவாமிகள் வணக்கம்.

வேறு.

நலமிக் குறுமெஞ் ஞானியென ஞாலம் போற்றும் பெரியோனு
யலகி லாட லாற்றியிரா மைய வடிகட் கருளிமிக
இலகும் புதுவை யினிற்பரத்தோ டிரண்டற் றென்று மெழுந்தருளும்
உலக நாதப் பெருந்தவத்தோ னுயர்பொன் னடிக ளுளத்தமைப்பாம்.

---

இராமைய அடிகள் வணக்கம்.

வேறு.

அருவமு முருவு மருவுரு வமுமா
யனுதியா யகண்டிதப் பொருளாய்ப்
பரவுறு மொன்றாய்ப் பலவுமாய்ப் பரந்த
பரத்துட னிரண்டறக் கலந்தே
தரமுறுஞ் சச்சி தானந்த மயமாய்த்
தனிப்பெரும் பூமனன் னகர்வாழ்
குருபர னும்ரா மையமா தவன்றன்
குரைகழல் களைமுடிக் கணிவாம். (5)

---

அவையடக்கம்.

வேறு.

அருளி ராமைய மாதவ னுடலோர் வணர்ந்தம்
பெருகு நாவுடைச் சேடனுந் தமிலன் பேசி
வரும னுத்துணை ஞானமும் பெற்றிலேன் வழுத்தல்
தருந கைப்பைநற் செந்தமி ழறிஞர்க டமக்கே. (6)

தப்ப ருந்தவத் தயரிரா மையவேள் சரிதஞ்
செப்ப லுற்றனன் செய்யுளாய்ச் சிறியனேன் கவியிற்
றப்ப னந்தமுண் டெனினுந் தகையுறும் பெரியோன்
மெய்ப்பொ ருட்கணே விழைவினு ளேற்புரெவ் விதத்தும். (7)

## நூற்பயன்.

இன்ப நல்கிரா மையுவே ளியம்பரு மாட
லன்பி னோதுவார்க் ககமுறும் பொருளெலா மனுகுந்
துன்ப நீங்கிடுந் துயர்மிகு வறுமையுந் தொலையும்
வன்ப தாழ்வுறை யுறுந்திரு வெய்திடு மாதோ. (8)

# நாட்டுப்படலம்.

ஆதி யீறிலா வம்பிகை யுடனா வணியுஞ்
சோதி யாகிய சுந்தர நாதனுந் துலங்குங்
கோதி லாதவேற் படையுடைக் குமரனுங் குறைவில்
நீதி யாலர சாண்டது நிம்பனன் னாடு. (1)

செக்க ரஞ்சடைத் தேவனுங் குமரனுஞ் சிறப்பான்
மிக்க சங்கம்வீற் றிருந்துநற் புலவராய் விளங்கித்
தொக்க தீந்தமி ழாய்ந்தன ரென்னினித் தொன்று
டிக்க டற்புவி நாடெலா மிணையென லெளிதோ. (2)

# நகரப்படலம்.

இனைய பாண்டிய நாட்டிடை யியம்பரு மேன்மைத்
தனமு மோங்குறுஞ் சைவநல் லொழுக்கமுந் தகைசா
லினமு மேற்பவர்க் கிலையென விரதமு மிழையாப்
புனையு மாவணி கர்க்கிடம் பூமனன் னகரம். (1)

ஆற ணிந்தரு ளண்ணலே பொருளென வறையு
மாறி லாதநற் சைவர்வாழ் வீதியு மறையோ
ரேறு கந்தவ னின்னருள் பெறுந்தன வணிகர்
வீறு தாங்குவே ளாளர்வாழ் வீதியும் பலவால். (2)

மந்த மாருதப் பூம்பொழின் மலர்கணன் மழைபோற்
சிந்து தேறல்கால் வாய்வழிந் தோடியே செறுவின்
முந்து றும்பயிர் வளமுற விளைத்துமுந் நீரிற்
சந்த மோடுசென் றுறெனப் பாய்வன தாமே. (3)

வளங்கு லாவுநன் மலையெனச் செந்நெலும் வகையார்
களங்கு லாவுபுன் பயிர்விளை தானியங் களையுந்
துளங்க லாவகை குவித்திடச் சூன்மழை துயிலும்
உளங்கு லாம்பெரும் பூதர மெனவணைந் துவந்தே. (4)

கந்து கத்தெழிற் கொங்கையார் கவினுறு மளநஞ்
சிந்து றப்பெருந் தேறலைப் பருமழுஞ் சிதைய
உந்தி யிற்கண்கள் சுழலவே ரொண்ணுத லரும்பப்
பந்த டித்தெழப் பிடிவரா டவர்மனம் பதைப்ப. (5)

மும்மை சாலுல கத்தினு மோங்கிய முதன்மைச்
செம்மை சான்றதென் றுரைப்பதெ னின்னகர்த் திகழுங்
கொம்மை சான்றந விஞ்சியு மகழியுங் குறைபா
டும்மை சான்றதென் றுணர்த்திடு மியாவரு முணர. (6)

வேறு

இத்தகு தியதென வியம்ப லாகுமோ
வுத்தம நகரமா வுமைக்கும் பூங்குடி
முத்தரு முரைக்கொணு முதுந கர்க்கணு
ரத்தலப் பெருமையு மறிந்த தோதுவாம். (7)

நகரப்படல முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 17.

## தலவிசேடப் படலம்.

வேறு.

கடம்பா ரணிய க்ஷேத்திரமே கவினுர் கீழப் பூங்குடியே
தொடங்கும் பூம னகரமெனத் தொன்மை யனந்த வபிதானம்
படங்கொ ளனந்த னுமுரைப் பரிதா மதன்சீர் படுபூந்தீ
நீடங்கொ ளாடைப் பொழிலினிடை யிணையோர் தலமு மிலையாமால்,

வேறு.

அருட்பெ ருங்குரு வாமிரா மையவெம் மடிகள்
திருப்பொ லிந்ததே சோமய மாகிய திறத்தாற்
கருப்ப திங்கிடாப் பதமருள் கடம்பமா வனத்தி
னிருப்பை யோர்ந்துரைத் திடவயன் தனக்குமிங் கெளிதோ. (2)

பங்க யாசனன் பரமனை யிகழ்ந்தபா தகத்தாற்
றுங்க மாம்வயி ரவனொரு சிரத்தினைத் துணுக்கென்
றங்க ணையறுத் திடமிக வெஞ்சியே பிரமன்
மங்கை பாகனை யருச்சனை புரிந்திட மதித்தே. (3)

பாரெ லாம்புகழ் பாண்டிய நாட்டிடைப் படர்ந்தே
சீரெ லாந்தருந் திருமலைக் கக்கினி திசையும்
ஏரு லாவிய வேரியூர்க் கியமதிக் கெழிலார்
காரு லாம்வெள்ளைப் பூதரக் கீழ்த்திசைக் கண்ணும். (4)

இரணி யாசுரன் றனைத்தடிந் திடச்சுர ரினத்தோ
டரவ மீதறி துயில்கொளு மண்ணலாங் கமர்ந்தே
பரவு மாரவை கூடிய கோட்டியூர்ப் பதியின்
கிருதி யின்றிசை யணிபுற நில்வுவ துவுமே. (5)

காளை யாகியே செண்டுகைக் கொண்டருட் கடவுள்
பாளை பாய்வயற் சுழியலிற் சுந்தரர் பாற்சென்
றூளு மாறியா மமர்வது கானப்பே ரென்ற
காளை யாருறை கானப்பேர் மேற்றிசைக் கண்ணும். (6)

மூர்த்தி மாதலந் தீர்த்தமா திகளினுன் முதன்மை
கூர்த்த *செப்பிய புரத்திலுங் குபேரதிக் குளதும்
போர்த்த வெல்லையிற் கடம்பமா வனத்திடைப் போந்து
தீர்த்தன் பூசனைக் குரியதிவ் விடமெனத் தேர்ந்தான். (7)

அக்க டம்பமா வனத்திடை யோடையொன் றமைத்துத்
திக்கெ லாம்புகழ் செங்கழு நீர்மணந் திகழு
மிக்க பங்கய மாம்பலே முதன்மலர் மிளிரத்
தக்க வான்பயி ராக்கிநந் தனவனஞ் சமைத்தான். (8)

* செம்பியபுரம் - சோழபுரம்.

அன்ன வோடையின் கீழ்த்திசைக் கரையின்வா னடையத்
துன்னி யோங்கிய கடம்படி தன்னில்வான் சுருதிச்
சென்னி யுங்கடந் தொளிர்சிவக் குறியினைத் திகழச்
சொன்ன வாகம முறைப்படிப் பதிட்டைசெய் துவந்தான். (9)

சந்தி திக்கணே தன்பெயர்த் தீர்த்தமுஞ் சமைத்துப்
பின்ன மின்றியந் நீரினு லாட்டியெம் பெருமான்
றன்ன தாகிய திருவடிக் கருச்சனை சாலப்
பன்னி மந்திர விதியினாற் புரிந்துபின் பணிந்தே. (10)

போற்றி சங்கர மங்கையோர் பங்குறை புனித
போற்றி சந்திர சேகர புலியத ளுடைய
போற்றி மான்மழுக் கையமெய்ப் புண்ணிய நீற்ற
போற்றி யைந்தொழிற் றண்டவ ஜயஜய போற்றி. (11)

வேறு.

என்றுபல முறைபழிச்சிப் பணிந்துறக்க முணவின்றி
யிருந்து பல்லாண்
டொன்றவருந் தவமியற்ற வும்பர்நா யகன்மகிழ்ந்தங்
குமையோ டேற்றிற்
றுன்றுபா ரிடங்களெலாஞ் சூழ்ந்திடமான் முதற்றேவர்
சுருதி போற்றச்
சென்றுநான் முகன்களிப்ப வெதிர்நின்று னெமையாளுந்
தேவ தேவன். (12)

கண்டனனுன் மறைக்கிழவன் கம்பிதங்கொண் டானந்தக்
கடலின் மூழ்கி
விண்டிருக ணீர்நிறைய மெய்யுரோ மஞ்சிலிர்ப்ப
வீழ்ந்து வீழ்ந்து
தொண்டுபடு முளத்தன்பு நிறைந்துமேல் வழிவதெனத்
துதித்துப் பல்கா
லண்டர்நா யகன்பதத்து மம்மையடி யினும்பணிந்தங்
கறைவ தானுன் (13)

தலைவனினை யிகழ்ந்துரைத்த கொடும்பாவி யேற்குமுய்தி
தானுண் டாமோ
புலையனேன் றனக்குமெளி தாயிற்றே வுன்னருடான்
புனித னேயென்
றுலையிலிடு மெழுகதுபோ லுருகிமனந் தனைமறந்தோ
வியம்போல் நின்றான்
மலைமடந்தை பாகன்மகிழ்ந் தஞ்சேலென் றருட்பார்வை
வழங்கிப் பின்னும் (14)

அசிந்திதனென் றெமையுணர்ந்து மாணவத்தா லிகழ்ந்துரைத்த
வரிய பாவங்
கசிந்தமனத் துடன்பூசை புரிந்துதவ மியற்றியதாற்
களிப்பி னோடு
மிசைந்திடயாம் பொறுத்தனமென் றிறைஞான மருளியிணை
யின்றி யோங்கும்
வசம்பெறுபஞ் சாக்கரமந் திரவுபதே சமும்புரிந்தான்
மறைக்கெட் டாதான். (15)

அருமறையா கமமுனிவ ரொடுசாரு மானந்த
வாட லோடும்
பெருமகிழ்வுற் றனர்பிரமன் பிறையணிவான் றனைப்பணிந்து
பெரும வென்று
மருவியவிந் நகர்பூம ணகரமென வென்பெயரான்
வழுத்தல் வேண்டுந்
திருமருவு மிவ்வோடை செங்கழுநீ ரோடையெனத்
திகழ வேண்டும் (16)

மலர்நிறைந்து குடியாகி வான்பயிராய்த் தழைத்தமையான்
மற்றோர் நாம
மிலகுமிந் நகர்தனக்குப் பூங்குடியென் றெல்லோரு
மியம்ப வேண்டும்

நலமுடனின் றனக்காட்டச் சந்நிதியி லமைத்திடுமிந்
நன்னீர்ப் பொய்கை
வலமுறவே யடியேன்ற னபிதானத் துடனென்றும்
வயங்க வேண்டும் (17)

கடப்படியிற் பதிட்டைசெய்து பூசித்துப் பேறுபெற்ற
கார ணத்தாற்
கடம்பவன க்ஷேத்திரமே யெனமூன்று வதுநாமங்
களிப்பி னோடுந்
திடம்பெறவிந் நகர்க்கணிதல் வேண்டுமிந்தச் சிவக்குறியுஞ்
சிறியே னமத்
துடன்பிரம புரீசரனென் றொளிர்தரவே யருள்கவென
வுரைத்து நின்றான். (18)

அண்ண லுமாங் கதற்கிசைந்தே யவ்வாறே யாகுகவென்
றருளிக் கூறுந்
திண்ணியவுன் றீவினையைத் தீர்த்துபதே சம்புரிந்த
திறத்தா னின்ன
புண்ணியமா நகரினினி யெமையுணர்ந்த புனிதரெலாம்
புரிவி னோடும்
வண்ணமுட னகலாமல் வதிந்திடுவர் மற்றுமினி
வகுப்பக் கேண்மோ. (19)

எமக்காட்ட நீயியற்று மிப்பிரம தீர்த்தமதி
னினிதின் மூழ்கி
யமையாருங் கடம்பைவலம் புரிந்தடியி லருட்குறியை
யருச்சிப் போர்க்குச்
சுமையாகு மிருவினையுந் தொலைத்தழியாப் பதமருள்வாஞ்
சுருதி யோயென்
றிமையாரும் பரமன்மறைந் திடப்பிரமன் வியமிதங்கொண்
டிறைஞ்சிப் பின்னர் (20)

வேறு.

அவ்வுழி யனேகநா ளமர்ந்த ருச்சனை
செவ்விதி னியற்றியே சென்று வாழ்ந்தனன்
பௌவலஞ் சூழ்லெழு மாதர் வேண்டிய
திவ்விய சித்திகள் திகழப் பெற்றனர். (21)

வாதவூ ரடிகள்முன் வயங்கு மாக்கொளக்
காதலான் மதுரையிற் கழிந்தெ மாளுடை
நாதனார் பெருந்துறை நணுகு நாளொரு
போதிராத் தங்கியிப் பூங்கு டிக்கணே. (22)

பிரமபு ரீசுரர் பிரம வித்தியா
அருளுடை நாயகி யடிப ணிந்துமே
தாமுறு ஞானவா சானைத் தந்தருள்
பரமனே யெனத்துதி பகர்ந்து மீண்டனர். (23)

வேறு.

சைவவே ளாளர்குல திலக ராகுஞ்
சாந்தசிவ யோகிகா ராள ரென்பார்
மைவிரவு கண்டனடி மறவா திந்த
வையமெலா மொருகுடைக்கீ ழாண்ட மன்னர்
தெய்விகமாங் கடம்பவன மடைந்தாங் குள்ள
திகழ்பிரம தீர்த்தமதிற் படிந்து வேண்டுந்
திவ்வியமஞ் சனத்தாட்டிப் பிரமன் பூசை
செய்தசிவ பெருமானுக் கணிகள் சேர்த்தி (24)

வேறு.

சுகந்தநறு மலர்களினாற் பூசித்துத் தவமியற்றத்
தொண்டர்க் கென்று
முகந்தருளும் பெருமானு முமையுடனவ் விலிங்கத்தி
னொளிரத் தோன்றித்

திகந்தமெலாங் கடந்தபுகழ்க் காரண விரும்பியதென்
செப்பு வாயென்
றநந்தையிலான் றனக்குரைப்ப வவனுமிகப் பணிந்துபுகழ்ந்
தறைவ தானுன். (25)

ஏருலாஞ் சமையநெறி யெல்லாமா யவைகடந்த
வெந்தை யேநந்
நீருலாஞ் சடைமுடியாய் நின்மலனே சிவஞானம்
நிறப்பி நாயேன்
காருலா மாணவத்தைக் களைந்துநின்னோ டாண்டறவே
கலந்து வாழச்
சீருலாம் பெருமானே சிறியேனுக் கருள்கவெனச்
செப்பி நின்றான். (26)

மறைநெறியின் வழுவாத யோகியினன் பினுக்கிரங்கி
மங்கை பாகன்
நறையொழுகுங் கடம்பவனத் தினிலிருந்தக் கினிதிசையி
னனுகி ரண்டா
யறைதருகு ரோசமதி னுலபா தபநிறைந்த
வடவி தன்னிற்
றுறைபலவுங் கடந்தகா ரணனையு மழைத்தேகிச்
சுருதி நாதன் (27)

ஆங்கமர்ந்தோ ராலடியி னுசானு யெழுந்தருளி
யன்ப னுகுந்
தீங்கனுகாச் சிவயோகி தனக்குபதே சம்புரிந்து
சிவஞா னத்தைப்
பாங்குபெற வருளியருட் பார்வையினுற் றீர்த்தமொன்று
பாரித் தாங்கே
வீங்கிளமா முலைப்பாகன் முதன்மூழ்கி யோகியையும்
விதியி னுட்டி. (28)

உத்தமமாந் தீர்த்தமத னபிதான முயர்ஞான
தீர்த்த மென்றே
தத்துவனு மருளியிருங் காராளன் றனைநோக்கித்
தக்கோய் கேட்டி
யித்தகைய தீர்த்தமதி னாடியிதன் கரையினமர்ந்
தெனைத்யா னிப்போர்
நித்தியமா முத்திதனை யடையவரு ளுவந்தருவ
னினைக்கும் பின்னாள். (29)

உன்னாலாஞ் சிலசெயல்க ளுலகமதற் குபகார
மாக வுள்ள
வன்னதனை யியற்றுதியென் றருளிமறைந் தனனமல
னன்ப னாரு
மின்னவிலாக் காராளன் கடம்படியி னெம்மானொ
டிறைவிக் கன்னல்
சொன்னசிவா கமப்படியே சுந்தரவா லயஞ்சமைத்தான்
சுரரும் போற்ற, (30)

ஆலயஞ்செய் தமைத்ததற்பி னன்புடன்கும் பாபிடே
கமுமங் காற்றி
மாலயனுக் கரியாற்கு நித்தியநை மித்தியமும்
வகுத்து வேண்டுங்
காலமதி னுத்ஸவா திகளியற்றிச் சிவதருமங்
களிப்பி னாற்றிச்
சீலமுடன் வீரமா நகரினுமா லயஞ்சமைத்துச்
சிறக்க வாழ்ந்தான். (31)

காரணநா யகனிட்ட கட்டளையே காராளன்
கணிதங் காணாப்
பேரணியு நகரமெலாஞ் சிவலிங்கப் பிரதிட்டை
பேணி யாற்றிச்

சிரணவு மறச்சாலே திருநந்த வனமோடை
　　தீர்த்த மெல்லா
மோனுக வியற்றியகத் திறைவனடி யடைந்தின்ப
　　மெய்தி னுல் (32)

பின்னுளி னுலகமெலாம் பெரிதுமகிழ்ந் தடி பணியும்
　　பெரியோ னுன
மன்னுளும் புகழுலக நாதவடி களுங்கடப்ப
　　வனமார்ந் தோங்குந்
தென்றுவென் றளிபயில்பூங் குடியடைந்தற் புதவாடல்
　　திகழச் செய்தே
சின்னுளீண் டமர்ந்தேகிப் *புதுவையினிற் சித்திபெறீத்
　　திகழ்ந்தா ரன்றே. (33)

வேறு.

பக்கமா துமையுமர் பவள மேனியர்
நக்கனுர் நான்முகற் கருளோ நல்கிடுந்
தக்கதா கியதல விசிட்டஞ் சாற்றினு
மிக்கமா தீர்த்தமேன் மையும் விளம்புவாம். (34)

தலவிசேடம் முற்றியது.

ஆகத்திருவிருத்தம் 51.

---

## தீர்த்தவிசேடப்படலம்.

வேறு.

திங்க ளங்கொழுந் தணிசடைத் தேவன்வீற் றிருக்கும்
புங்க மாகிய பூமனன் னகரினெஞ் ஞான்றும்
மங்க லந்தருந் தீர்த்தநான் குளவதன் மகிமை
துங்க மார்தரு சேட னுந் துதிப்பதற் கெளிதோ. (1)

திருவ ருட்பெருஞ் சித்தனு கியவிரா மைய
வரம ளிக்குமா தவன்பெருங் கருணையோர் வடிவா
யுருவெ டுத்தென வோங்கியம் மாதவன் பெயர்கொண்
டிருமை யுந்தரு மாடுவோர்க் கன்புட னென்றும். (2)

---

* புதுவை—புதுக்கோட்டை.

இவ்வி ராமதீர்த் தப்பெருந் தென்கரை யிருந்தே
எவ்வ மில்விரா மையவெம் மடிகளெண் ணிகந்த
கௌவை யின்றிய வாடனு மியற்றியக் கரைமேற்
றிவ்வி யப்பெருஞ் சித்தியும் பெற்றனர் திகழ. (3)

தன்னை யூருணிக் கரையிரா மன்னெனச் சாற்றி
யன்ன வாறுதென் கரைதனி லகண்ட பூ ரணமா
யென்னை யாளிரா மையவே ளிரண்டறக் கலந்த
நன்னர் நாளிருந் திராமதீர்த் தம்மென நவில்வர். (4)

தனக்கொப் பில்விரா மையவேள் சமாதிகொண் டருளும்
வனப்புற் றோங்கிய பானுவா ரந்தனின் மகிழ்ந்தே
நினைப்பி னுந்துயர் நீக்குமித் தீர்த்தநீ ராடின்
மனத்துக் கொண்டநல் வரமெலாம் வழுவிடா தடைவர். (5)

ஆண்டி னோர்முறை யடிகளின் றிருவிழா வதனின்
வேண்டி மூழ்கியே விதிப்படி யண்ணலா ரடக்கம்
பூண்ட பொற்சமா தியைவலம் புரிந்துபூ சிப்போ
ரீண்டு மன்னரா யிலங்கிவீ டெய்துவ ரினிதே. (6)

வேறு.

உத்தம ஞான தீர்த்த முயர்வுறும் பிரம தீர்த்த
மித்தலம் புகழ வோங்கு மினியசெங் கழுநீ ரோடை
சித்திக ளருமி ராம தீர்த்தமா மிவைக ளன்னிற்
சித்திரா பருவத் தன்றுந் திங்களின் றோற்றத் தன்றும் (7)

வேறு.

மதிகதிரோ னிடத்தொடுங்குந் தினஞ்சோம வாரமே
வருடத் தோற்றந்
துதிகதிர்க ளுமையரவம் விழுங்குதினம் விதிபாதந்
துகளி லாத
கதியருளு முத்தரா யணமிந்நா ளன்புடனே
கருதி மூழ்கிப்
பதியைவணங் குதல்துதித்தல் மனுவோத லிகவபுரியிற்
பலன்மிக் காமால், (8)

வேறு.

திமையை யகற்றுமா தீர்த்த மேன்மையைத்
தாமிக யாவரே சாற்ற வல்லவர்
பூமியி னுயர்பெரும் பூங்கு டிக்கணே
வாமமார் மூர்த்தியின் மகிமை யோதுவாம். (9)

தீர்த்தவிசேடப்படல முற்றியது.
ஆகத் திருவிருத்தம் 60.

# மூர்த்திவிசேடப்படலம்.

வேறு.

கடம்படியிற் பிரமனுடன் காராள னெழுமாதர்
களிப்பி னேத்துந்
திடம்படுநம் பிரமபுரீ சுரன்பெருமை யாவரே
செப்ப வல்லா
ரிடம்படவோங் கியபிரம வித்தியா நாயகியோ
டிறைவன் றன்னைத்
தடம்படுமன் பினிற்பணிவோர்க் கிம்மையினின் பமும்வீடுந்
தழைக்கு மன்றே. (1)

ஓங்குமருட் சித்தனிரா மையனகண் டாகார
வுருவ மாகித்
தீங்கடையாச் சிவலிங்க மாயினனப் பெருமானின்
சிறப்பை யாரே
யீங்குவகுப் பவர்பணிவோர்க் கெண்ணியவை கைகூடி
யிடர்கள் நீங்கித்
தாங்கொணு வறுமையும்போய்ச் சகலவளத் துடனின்பஞ்
சார்வ ரன்றே. (2)

வேறு.

பஞ்சமர் குலத்து வந்த பைந்தொடிக் குற்ற தீய
நஞ்செனும் பெருநோய் தீர்த்து நயக்கும்வை சியமு தாட்டிக்
கெஞ்சலி லரவந் தீண்டி யேறிய விடந்தீர்த் தாண்டும்
அஞ்சிடா தருளிக் காத்த தற்புத லிங்க மம்மா (3)

எண்ணிய வெண்ணி யாங்கே யினிதரு ளிராம லிங்கப்
புண்ணிய மூர்த்தி வேண்டும் புத்திரப் பேறு நல்குந்
திண்ணிய வன்பர்க் கென்றுஞ் சித்திகள் பலவு நல்கு
மண்ணின்மே லிதற்கொப் பாக வருக்கவோர் மூர்த்தி யுண்டோ. (4)

வேறு.

கருவா தனையைக் கழித்தருளை நல்கும்
பெருமான் சசிவர்னப் பெம்மான் பெருமை
யுருகா தரத்தா லுரைப்பே னுமையாள்
தருகா தலன்பெருமை சாற்றுவார் யாரே. (5)

வேறு.

காருலாங் கடம்ப வனத்தினோர் நிருதி
கடிகையோ ரைந்தினிற் காணுஞ்
சீருலாஞ் சிவகங் கைப்பதி யாசன்
றிகழ்சசி வர்னனென் றிடுவோன்
தாருலாம் புயத்தா னொருதினம் வேட்டை
தனக்குவந் தவன்மிகு மயர்வாற்
பேருலாங் கடம்ப வனத்தின்வந் தடைந்தான்
பேணுநாற் படைபுடை சூழ. (6)

வந்தவேன் மகிபன் மந்தமா ருதத்தான்
மனங்களித் தாங்கணுற் றமர்ந்தே
நந்தலில் குடிகள் தமையவ ணிறுவ
நாந்தக வீரரை நோக்கி
யிந்தமா வனத்தி னொருசிறை யடர்ந்தாங்
கிருண்டபா தபமெலா மழித்துச்
சுந்தர மாகத் திருத்துமி னென்றே
சொற்றன னுற்றவாள் வயவர். (7)

சென்றெமை யாளுங் கடம்படிப் பெருமான்
றிகழுமா லயத்தினோர் நிருதி
தன்றனித் திசையிற் கூவுதா ரத்தே
தானடர்ந் திடுவன மழித்து

வொன்றுமந் நிலத்தை யகழ்ந்தன ராங்க
ணுள்ளிருந் தெழுந்தன னடியார்க்
கென்றும்விக் கினங்க ளணுகுறா தருளு
மிபமுகத் தைங்கரத் தண்ணல். (8)

கண்டனர் வயவாள் வீரரா னந்தக்
களிப்புட னாடின ரோடித்
தண்டமாய் விழுந்து பணிந்தனர் வேந்தன்
றனைவிநா யகன்வருந் தகுதி
விண்டன ரரசன் மெய்யலாஞ் சிலிர்ப்ப
மேவினன் யானைமா முகத்தே
மண்டர்நா யகனைப் பணிந்துதன் பெயரா
னழைத்தனன் மும்முறை யன்றே (9)

அவ்வுழிச் சசிவர் னப்பெரு மானுக்
காலய மமைத்தகங் களித்தே
செவ்விதின் மிகுக்கும் பாபிடே கமுஞ்செய்
சிறப்புட னுற்றிமா னியங்கள்
எவ்வமில் பூசைக் கினிதளித் தாங்க
ணியலுநால் வருணமுள் ளாரைக்
கவ்வையின் றாக நிறுவிமீண் டடைந்தான்
காவலன் றன்சிவ கங்கை. (10)

வேறு.

அத்தகுநற் றினமுதலா வமர்ந்துசசி வர்ணனெனு
மரச னாற்றும்
வித்தகவா லயமேவி விளங்குசசி வர்ணவிநா
யகன்றற் போற்றும்
உத்தமமெய் யடியவருக் குற்றதுய ரொழித்துநல
முதவி வேண்டுஞ்
சித்தியெலா மருளியெமக் காணாகி யென்ஞான்றுந்
திகழ்வன் மாதோ. (11)

வேறு.

வனமுறு பூமனன் னகரின் வைகிய
புனிதமார் மூர்த்திமேன் மையைப் புகன்றன
மினிமையோ டெமக்கரு ளெழிலி ராமைய
அனகனு ரவதரித் தமைவி ளம்புவாம். (12)

மூர்த்திவிசேடப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் 72.

# இராமைய அடிகள் திருவவதாரப் படலம்.

வேறு.

பொன்னி மாநதி பாய்ந்துறுஞ் செறுவெலாம் பொங்கிப்
பின்ன மின்றியெக் காலுநெற் சாலிவான் பிறங்கித்
துன்னும் விண்டருக் கடந்துலாந் துளங்கலில் வளமார்
நன்னர் மேன்மையி னொளிர்வது சோழநந் நாடு. (1)

பொய்யின் மாதவக் குறுமுனி கமண்டலம் பொழிந்த
தெய்வ மாநதிப் பொன்னியோங் கியவளந் திகழுஞ்
சைய மால்வரைத் தலைபிருந் தவனிமா மகட்குச்
செய்ய தாகிய செவிவிபோற் பெருகிடுந் திகழ. (2)

வேறு.

பொழிலெலாஞ் செந்தேன் பொங்கும்
புனலெலாந் தாளம் வாவிக்
குழியெலாங் கழுநீர்க் கஞ்சங்
குரம்பெலாம் பசும்பொ னுலை
வழியெலாஞ் சாற்று வெள்ளம்
வரம்பெலா மணிகள் மாதர்
மொழியெலாங் குயில்க ளன்னர்
முகமெலாம் வனச மாதோ. (3)

வேறு.

ஆற்று நீர்பாந் தம்மத கூடுபோய்
நாற்றி டுங்கழ னிக்கடை நண்ணவே
ஏற்ற மோடுகண் டேவெழின் மள்ளர்கை
யாற்று மோதையி னண்ட மதிருமால். (4)

நாடி நாறு பறிப்பர் நலமுறக்
கூடி நீண்முடி சேர்ப்பர் குறைவிலா
தோடி யோடி யுழுவ ருவப்புடன்
பாடி யாடி நடுவர் பழனமே. (5)

புதிய தண்புன லிற்குடை பூவையர்
மதுவி னுற்ற கதுப்பின் மணமுறீஇ
நிதிபெ றுங்கட லிற்றுகள் நீக்கியே
இதமு றக்கலந் தின்மண மீயுமால். (6)

இனைய சோழநந் நாட்டிடை யெங்கணு
மனைதொ றுந்திரு மங்கல வோசையே
புனையும் விண்ணவர் போற்றும் புனிதமார்
வினையு மாமறைக் காடெனும் வாழ்பதி. (7)

அரங்கி டைச்சதி யோடு மணங்கனார்
தருங்க ளிப்பிற் றமைமறந் தாடுவார்
கருங்க டைக்கணிற் காமுகர் நெஞ்சினை
யொருங்கி டச்செய் துவப்பர்க ளெங்கணும் (8)

பூம்பொ ழிற்கட் பொருந்துறு வண்டினந்
தாம்பு னற்றடந் தாவி மதுவுண்டு
மேம்ப லுற்றங் கெழுகயன் மீதெழீஇ
யாம்பு யற்பிளந் தவ்வுழி யாடுமால். (9)

துங்க முற்ற பணைமுலைத் தோகைமார்
பங்க யப்பத மோச்சப் பருத்திடு
மங்க லத்தொழின் மைந்தர் புயமெலாந்
தங்கி டச்சிவப் பேறித் தயங்குமால். (10)

வேத வோசையும் விண்ணவ ருப்புகழ்
கீத வோசையுங் கின்னர வோசையும்
நாத னாடி போற்று நலமுடை
யோத வோசையு மும்பருற் றோங்குமால், (11)

மூவர் பாடு முறையது நான்மறை
மேவி யேதொழு மேதகைத் தாமிருந்
தாவில் கோடி யெனப்பெயர் தாங்கிடும்
பூவின் மேலுயர் தீர்த்தமும் பூண்டது, (12)

வேறு.

இத்தகைய பதியினிற்றைக் கிருநூறுண் டெட்குமுனம்
வைத்தபெரும் பத்திமையான் வளர்தாதர் குலத்துதித்தோன்
உத்தமனுங் கோவிந்த தாசரியி னுயர்தவமே
மெய்த்தவுரு வெடுத்ததெனு மேதகையான் விழுப்பமுளான். ()

சுப்பைய தாசரியென் றுலகமெலாஞ் சொலும்பெயரான்
வைப்பனைய பெருநிதியான் மாதவன்ற னடிக்கன்பன்
செப்பரிய பிணிகளெலாஞ் சேதிக்கு மாற்றலின
னொப்பரியான் மெய்ப்பொருளை யுணர்ந்தவனுக் குறவினர்கள். ()

வேறு.

ஆயுர் வேத முறையை யறிந்தநற்
றாய னுக்கு மணஞ்செயத் துன்னினர்
மேய மங்கல வோசை விளங்கிய
தீய தின்றிய தில்லை வளாகமே. (15)

வேறு.

ஐந்தொழிற் கூத்த னாடகச் சபையி
னாடிய புகுவதன் முன்னர்
வந்திரு முனிவர் மனங்களித் தேத்த
மங்கையும் பிகைமன மகிழத்

தந்தமி னின்பந் தலைக்கொள வானோர்
தாண்டவ மாடின னதனு
லந்தமி லாதி சிதம்பர மாமென்
றறைவரித் தலத்தையே யன்றோ. (16)

மனுநெறி வழுவா மற்புரந் தவனி
மகிழ்வுட னளிக்கும்வை வேலான்
குனிசிலை வீர னுயிரா மப்பேர்க்
குரிசிலாங் கிளையவ னோடும்
பனிமொழி சனக னின்றபைந் தொடியும்
பவனன்மா மகனொடும் பாரி
னினமுற விளங்கிப் பணிபவர்க் கின்ப
மீதவித் தலமதே யென்றும். (17)

வேறு.

ஓது மித்தலத் துற்ற மணம்புரிந்
தேத மின்றி யெழின்மனை யாளொடும்
போது சுற்ற முடன்மிகும் பொற்பமர்
காதன் மாமறைக் காடடைந் தானரோ. (18)

அல்ல லின்றி யறநெறி யின்வழா
தில்ல றப்புரிந் தெங்களுந் தன்புகழ்
செல்லு மாறு திருவனை யாளுடன்
புல்லி வாழ்ந்தனன் பூதலம் போற்றவே. (19)

ஆண்ட னேகங் கடந்து மகமகிழ்
வேண்டு மோர்மக வேனுமி லாமலே
யீண்டு மில்லறத் தின்பம தின்றியே
யீண்டி னிச்செய்வ தென்னென வெண்ணினன். (20)

இம்மை யின்பு மறுமையி னின்பமும்
அம்மென் மைந்தரின் றாமெனி லாகுமோ
எம்மை யாளு மிறைவ னெமக்கருள்
செம்மை யோவெனச் *செல்லலுற் றனரோ. (21)

* செல்லல்—துன்பம்.

வேறு.

பொன்னொடு புகழும் புவியர சிணையாம்
போகமு முடையவ னெனினும்
நன்னய மழலை மக்களின் றாயின்
ஞாலமேற் பயனிலை யென்றே
யின்னலுற் றிரங்கி யெம்பிரா னருளா
லின்னுமோர் மணஞ்செயின் மைந்தர்
துன்னுவ ரென்றே சோதிடர் கூறத்
துயரகன் றனன்றுக ளில்லான். (22)

பரசிவ னெண்ணெண் டிருவிளை யாடல்
பாங்குடன் செயும்பழம் பதியாம்
வரமுறுங் கூடன் மாபெருந் தலமார்
வளமிகும் பாண்டிநந் நாட்டிற்
றருமிரா மச்சந் திரபுரங் கடியா
பட்டியென் றுறைதருந் தகைசா
லருமறை யுடனா கமநெறி வழுவா
வறநக ராங்கணுற் றடைந்தே, (23)

நந்தவில் நயினார் தாசரி யீன்ற
நகைமலர்த் திருவனா ளுபரும்
புந்தியாள் பொன்னம் மாளெனப் புகலும்
பொற்றொடி தன்னைவேட் டவனின்
றந்தமில் வேத வனமடைந் தன்பி
னாற்றின னில்லற மதன்மேற்
கந்தமார் குழலி கருவுறீஇ விளங்கக்
கண்டகங் களித்தன னன்றே. (24)

ஐயிரு மதியு மகலநல் லோரை
யணுதுநற் சுபதின மதனில்
வையகம் புகழ மாதவர் மகிழ
மறையொலி முழங்கவா னுயருஞ்

ஜையமேற் கதிரோன் றுனுதித் ததுபோற்
சலஞ்சலர் தாளமீன் றதுபோற்
ஜகயுற வின்றிக் கற்றவர் புகழுங்
காதலன் றன்னையீன் றனளால். (25)

தந்தைநீர் படிந்து தருமற மாற்றித்
தாங்கொணு மகிழ்தலே சிறப்ப
மைந்தனை நோக்கி மங்கலம் பெருகும்
வாழ்வுவந் தடைந்ததா மென்றே
சிந்தையிற் களித்துச் செய்வன வியற்றிச்
சீதரன் கோவில்புக் கிறைஞ்சி
வந்தவர்க் கன்ன தானமு முதவி
வள்ளல்வீற் றிருந்தனன் மாதோ. (26)

ஈன்றதாய் தந்தை யிருவரு மகிழ்ந்தி
ராமையா வெனப்பெயர் புனைந்தே
ஆன்றவர் புகழு மண்ணலை வளர்ப்பா
ராயின ராண்டிரே ரைந்திற்
சான்றவான் குழவி மீண்டுமோர் மகனைக்
கருவுற்றீ யளித்தனள் களிப்பாற்
சான்றவர் புகழுந் தந்தைசித் தாதி
தாவெனத் தரும்பெயர் புனைந்தான். (27)

சிறியோர் புகழ்சித் தாதிதோன் றியவீ
ராண்டினிற் சீதர னுலகைப்
பாருளோர் துதிசுப் பையதா சரியார்
பண்புட னெய்திடப் பரிவாற்
காருலாங் கூந்தற் கன்னியுந் துன்பக்
கடலிடைப் படிந்தனள் கணவன்
ஆருயிர் துறப்பி னறநெறி மடவா
ரல்லலே யாவரோ யுறைவார். (28)

வேறு.

உத்தரக் கிரியை யாவு மோங்கிரா மைய னென்னும்
உத்தமன் றன்றுற் செய்வித் துயரிரு புதல்வ ரோடுந்
தத்தைமென் மொழியா ளீன்ற தாயிலை யடைந்தாள் செல்வ
நத்துமின் கடியா பட்டி நாமதந் நகரி னம்மா. (29)

வேறு.

பொன்னம்மா ளெனப்புகலும் புனிதவதி நயினரின்
புதல்வி யாகு
மின்னனையா ளுடன்பிறந்த பங்காரு தாசரியாம்
விழுமி யோனுந்
தன்னயமார் தங்கையுடன் மருகரிரு வரையுமிகத்
தகுதி யோடு
மின்னவிலா மகிழ்சிறப்ப வினிதோம்பி வந்தன
லெவரும் போற்ற. (30)

திருவவதாரப்படல முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 102.

---

# திருமணப்படலம்.

---

வேறு.

சிந்தை தோயுமைம் பொறிகளும் புறஞ்செலாச்
சித்தனா ருணர்ந்த
வெந்தை யாமிரா மையவேட் கொருமண
மியற்றிய பெருஞ்சீர்த்தி
வந்த வாறுரைக் குதுமெனு மாவலென்
மதியினை வலிந்தீர்ப்ப
வுந்து மன்பினுற் சிறிதள வுரைத்திடற்
குணர்வுளோ ரிகழாரே. (1)

வேறு.

மறைமுனி வாரும் புகழிரா மைய
மாதவ னகவையி ரேழுற்
றுறைதரக் கண்டங் குயர்மகிழ் வெய்தி
யோங்குபங் காருதா சரியார்
முறைமணப் பருவ மெய்தின னெனது
முதற்புதல் வியையளிப் பேனென்
றுறவின ரிளையா ளொடுமனை யாட்கு
முரைப்பவாங் கவருநேர்ந் துணர்ந்தார். (2)

தளையவிழ் கோதைக் குழன்மட வாலைத்
தானருந் தவத்தினு லீன்ற
முளரிமா தனைய வேங்கட சுப்பம்
மாளெனு முத்தவாண் முறாற்
கினிமொழி யாளை மருகனுர்க் களிப்பான்
கிளையுடன் மணவிழாச் செயற்கா
மொளிருநல் லோரை யுறுசுப தினமொன்
றுவப்புடன் குறித்தன னன்றே. (3)

திருமண வோலை வரைந்துற வினர்கள்
திசழ்மறை யவர்மிகும் பெரியோ
ரரியநண் புடையோ ரியாவரு மறிய
வகமகிழ்ந் தனுப்பியாங் கமர்ந்தே
பெருதுமங் கலஞ்செய் தணியுறு மனையைப்
பேணியா வரும்புகழ் பெரியோன்
றருமிரா மையன் றிருமணக் களிப்பாற்
றூமுயன் றலங்கரித் தனனால். (4)

வேறு.

நாற்றிசை பரந்து விண்ணுறா மன்றற்
காவண் நலம்பெற வியற்றிப்
போற்றுபன் னிறப்பட் டுயர்விதா னங்கள்
பொருந்துவான் பழுக்குலை பதுமை

தோற்றுமா டிகள்தோ ரணநிரை யார்த்துச்
சுவைக்கழை கமுகொடு கதலி
வீற்றுவீற் றுக நாட்டிநற் றரையின்
மிருமணக் கலவையின் மெழுகி (5)

பன்னிறத் தொளிரு மணிவட நாற்றிப்
பதுமையேந் தியவிளக் கேற்றிச்
சொன்னவெண் வகைமங் கலமிருங் கும்பந்
தூயபொற் பாலிகை நிறைத்தே
இன்னதென் றறியா திலகொளி பரப்பு
மிரத்தின கம்பள மெங்குந்
துன்னிய விரித்தோ மப்பெருங் குண்டந்
துலங்கவே திகையொடு மமைத்தான். (6)



அரியதன் மருகன் மணமக ளோடங்
கமர்ந்தணி மணங்கொளற் கமைந்த
பெருமையா ரரியா தனத்திறுற் புறமும்
பிறங்குகால் வித்துரு மத்தாற்
றருமதன் மேற்போ ளகைநவ மணியாற்
சமைத்தர தனவடந் தயங்க
வருமலர் மாலை நாற்றியெவ் விடத்தும்
வாள்விடு சரவிளக் கேற்றி. (7)

இத்தகை யணிக ளிலங்குபங் காரு
வெனும்பெரி யோன்மகிழ்ந் தியற்றி
நத்துமா மணத்திற் குறுமுற வினரை
நயமுகத் துடன்வர வேற்றான்
வித்தக மிகுநற் சுபதின மணநாண்
மேவுகா லையினன்மை யாளும்
அத்தனூர்க் கியங்க ளார்த்திடப் பனிநீ
ராட்டிநன் னுதலினீ றணிந்தே. (8)

வேறு.

சந்தனகுங் குமத்திலதஞ் சாத்திவெண்பட் டிடைவீக்கி
நந்துபசும் பொன்னரைஞா ணசைமணிப்பட் டிகையிறுக்கிக்
கந்தமலர் மாலைநறுங் கவின்குஞ்சிக் கணிந்துமிகுஞ்
சுந்தரவாண் மணிக்குழைகள் துலங்கிடச்செய் திருசெவியில் (9)

கனகமணிக் கஞ்சுகமாங் கவசமணிந் துயர்தாளப்
புனைமணிக்கண் டிகைகழுத்திற் புனைந்தகல நிறையமிகுந்
தினகரனேர் நவமணியா ரங்களொடுந் திகழொளிர்
வனைபதக்க முடன்மேவு மலர்மாலை வேய்ந்தனரால் (10)

மந்தரநேர் பூம்புயத்தினின் வாகுவல யமுமணிந்தே
சுந்தரப்பொற் சரிகையினற் றுலங்குத்த ரீயம்வனைந்
திந்திரவில் லெனுங்கணைபா ழிகள்விரல்கட் கேற்றிபொளிர்
நந்தலிலா முடியென்ன நகும்பாகை சிரத்தமைத்தே. (11)

மங்கலது ரியங்களொடு மறைமுழக்க மார்த்தெழவெண்
சங்கொலிகள் தழங்கிடநற் சாந்தாற்றி பணிக்கவரி
அங்கிருபால் வீசமிகு மணிமணமண் டபந்தனக்குப்
புங்கவனைக் கொடுவந்தே புகன்மணியா தனத்தமைத்தார். (12)

மணமகள்வேங் கடசுப்பம் மாளென்னு மலர்க்கொடியை
அணியிழையார் குங்குமச்சேச் றப்பிமஞ்சட் காப்பணிந்து
தணிவின்மண நீராட்டிச் சங்கமதிற் றிருவெண்ணீ
றணிபெறுநற் றிலதமுட னமைதலுறப் புனைந்தனரால் (13)

உயர்பசும்பொற் பட்டாடை யொளிரநசுப் புறவணிந்து
இயல்தருபன் மணிபதித்த விலங்கொட்டி யாணமதிற்
பயிலுறச்செய் திறுக்கிநறும் பதுமமெனுஞ் சீறடிகட்
குயர்பெறுநூ புரஞ்சதங்கை யாம்பணிக ளார்த்தனரால். (14)

காரோதிக் குயர்வாசக் காசறைபெய் தணிகோதைத்
தாரோடு முறமுடித்துத் தயங்குவட்டத் தகட்டணியும்
பேராரு மிருசுடரிற் பிறங்கணிநன் னுதலணியோ
டேராரு மணிச்சுட்டி யிவையாதி கலன்புனைந்து (15)

செவிக்கணியும் பணிகளெலாஞ் சேரவணிந் துயர்நாசிக்
குவப்புடன்வேண் டுவபுனைந்தஞ் சொளிபரப்பு நவமணியிற்
சவிக்குயரும் வடங்களெலாஞ் சங்கெனுங்கந் தரத்தடர்ந்தே
புவித்திரமாந் திருமார்பிற் பரவிடக்கை வனைந்தனரால். (16)

அங்குலிகட் காழியணிந் தமைபுயத்திற் கடகமுடன்
செங்கரத்திற் சூபரணிகள் சேர்த்தியினுஞ் செப்பரிதாம்
பொங்குமணிக் கலன்புனைந்து பூந்தவிசிற் றிருமகளை
யிங்கிவளென் றுரைப்பவழைத் தெழின்மணிமண் டபத்தேகி. (17)

ஆடகப்பொன் னுதனத்தி லடிகள்வலப் புறத்தமையப்
பாடகச்சீ றடியணங்கைப் பாங்குடனங் கிருத்திடவே
தோடவிழ்தார்ச் சானகியுஞ் சுந்தரரா கவனுமெனக்
கூடிவிளங் கினர்கண்டோர்க் குவனைதபெரு கிடவம்மா (18)

வேறு.

ஆய நன்மண வோரையி னகமகிழ் வோங்கத்
தூய மாமனில் லாளுட னடிகளின் றுணைமென்
சேய சீரடி கழுக்கர சச்செழுந் தீர்த்தம்
பாய வன்புட னூட்டியே பணிமலர் சூட்டி. (19)

வாசச் சாந்தமு மான்மதச் சேறுமட் டித்துப்
பூசித் தேற்றரு ளருந்தவப் புதல்வியைப் புகரில்
நேசத் தோடெனு வடிகளின் கரத்திடை நிகரில்
மாசற் றோங்கிய மணமகள் திருக்கர மமைத்தே. (20)

மறைம னுக்களை யோதிநீர் வார்த்தக மலர
நிறையு நன்மது பருக்கமுண் பித்தபி னிங்கா
தறையு மந்திர முறையினங் கியைமிகு மறையோன்
குறைவி லாவகை வளர்த்தனன் குண்டமேல் நிமிர. (21)

ஓமத் தீப்புகை யும்பர்நா டோங்கநான் மறையோர்
நேமத் தோடுமா சிகள்பல நிகழ்த்திட நிகரில்
வாமத் தாருமங் கலவியம் வலம்புரிச் சங்கஞ்
சேமத் தார்கலி யார்த்தெனத் திசைதொறு முழங்க. (22)

எம்பி ரானடி யார்பெரி யோர்களெங் கெங்கும்
உம்ப ராலள விடற்கரு முறவின ரறவோர்
வம்பு லாமலர் மஞ்சளக் கதையுடன் வாரி
யிம்ப ரோங்கிடச் சயசய வெனப்புகன் றிறைப்ப. (23)

மாதர் மங்கலம் பாடிட மாந்தர்கள் மகிழ்ந்தே
வோது மாமண மலர்சொரிந் தார்த்திட வுவப்புற்
றேத மின்றியிங் கெளியனை யாளிரா மைய
மாத வன்றிரு மங்கல மணமகட் கணிந்தான், (24)

மங்க லத்திரு நாண்புனைந் தியாவரு மகிழ
அங்கை பற்றினன் மனைவியோ டங்கிவாய் நிறையத்
துங்க மாப்பொரி தூயற வோர்க்குறுந் தானம்
பொங்க நல்கிநல் லெரிவலம் புரிந்தனன் புனிதன். (25)

மன்ற லந்தொழி லம்மிமேன் மங்கைசீ றடியைத்
தன்றி ருக்கரத் தாற்பிடித் தமைத்தருந் ததியாந்
துன்றி ருந்தவத் தவன்மனை காட்டிநற் றூய
நன்று நன்மணச் சடங்கெல்லாம் விதிவழி நடத்தி. (26)

இந்தி ரன்சசி யோடிருந் தெனமணா வரையின்
வந்த மர்ந்தனன் வானவ ருணவினு மலிந்த
வுந்து மின்சுவை யுணவளித் துற்றவர்க் கெல்லாஞ்
சிந்தை யோங்கவேண் டியவெலாஞ் சிறப்புட னீந்தான். (27)

வள்ள லன்றிரா மணமக ளொடுலா வந்த
எள்ள லின்றிய வெழில்பெறுங் காட்சியை யெளியேன்
உள்ள வாறுநன் குரைப்பதற் கொண்ணுமோ வுரவோர்
கொள்ளு மன்பினாற் கூறுவ ரணியெலாங் குலவ. (28)

எண்ண ரும்புகழ்த் திருமண முடிந்தபி னெமையாள்
அண்ண லாமிரா மையவேள் மனைவியோ டாங்கண்
வண்ண மோங்குபங் காருதா சரியெனு மாமன்
கண்ண கன்மனை தன்னின்வாழ்ந் திருந்தனன் களித்தே. (29)

திருமணப்படல முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 131.

# உபதேசம் பெற்ற படலம்.

(உலகநாத சுவாமிகள் வரலாறு.)

வேறு.

நீனிறச் சிகண்டி வாகனத் தமரு
நின்மல னீங்கிடா தமருந்
தேனுலாந் திருப்புல் வயலெனுந் தலத்திற்
றிகழ்சிவ மணங்கமழ் வெய்த
மேனிமிர் தருமிற் றைக்குநூற் றைம்பான்
விளங் குமரன் கேட்குமுன் மேன்மை
வானுலாஞ் சுப்பி ரமணிய பிள்ளை
யண்மைவே ளாண்குலத் தலைவர். (1)

வேறு.

குப்பாயி யென்றுரைக்குங் குலமனைவி தன்னுடனுங்
கொப்பேது மின்றிமிக வுளுற்றுபெருந் தவப்பேற்று
லிப்பாரிற் சுகரெனவே வினிதினவ தரித்தனரால்
முப்போதும் புகழ்பெருமை முதறிவி னொருபெரியார். (2)

சீருலக நாயகியின் சிறந்தவுபா சனையதனாற்
பேருலக நாதனெனப் பெயர்புனைந்தங் கவளருளா
லேருலவு மெஞ்ஞான வெழின்மூர்த்தி யாய்ப்பெருமை
பாரறியா வகையுலக நடையினர்போற் பயின்றனரால். (3)

உலகநடை யினர்போலங் குறுநாட்டுக் கணக்கெழுதி
யிலகிடுநா டனிலொருநா ளேற்றவதி காரிமுனம்
பலகணக்க ருடனமர்ந்தே பாங்குறத்தன் கணக்கைமுடித்
தனும்பதைப்புற் றணிமேலா டையைக்கரங்கொண் டயர்ச்சியுடன் (4)

தில்லையிற்பொன் னம்பலத்தே திருநடஞ்செய் தெமையாளும்
வல்லிசிவ காமிமண வாளன்முனந் திரைச்சீலை
நல்லவனற் பிடித்ததென நாக்குழறக் கூறியதை
யொல்லையிற்றேய்ப் பாரெனத்தேய்த் தனருணர்வி னொப்பிகந்தார்.(5)

அதிகாரி முதலாக வனைவருங்கண் டதிசயித்தே
மதிபேத முற்றனரோ வெனக்கருதி மற்றுமிவ
ரிதுபோது செய்தவெலா மென்னேயென் றேவலராற்
கதியோடு முற்றறிந்தார் கண்டவெலா முண்மையென. (6)

அறியாமை யாலிழைத்த வபராத முள்ளவெலாங்
குறியாமற் பொறுத்தருளிக் குறித்தவிட மெழுந்தருளு
மிறையோனே யெனப்பணிந்தா னிணையடிகள் முடிக்கணிந்தான்
றிறையுமதி காரியெனு நிகரில்பெருந் தவமுடையோன். (7)

வேறு.

அடியனுக் கருளு முலகநா தப்பே
ரடிகளும் புன்னகை யடைந்தே
கடிதினுங் கெழுந்தே கருத்தினுக் கேற்ற
கடமெலாந் திரிந்துவந் துற்றார்
புடையெலாஞ் செந்தேன் புனலெனப் பாயும்
பூம்பொழி லெங்கணும் பொலிந்தே
நடையினுன் மேன்மை யுறும்பெரி யோர்வாழ்
நானிலம் புகழ்சிவ கங்கை. (8)

அற்றையி னடிகட் *ககவைமுப் பானொன்
றாகுமவ் வயதினுங் கமர்ந்தே
செற்றமில் தவத்துப் பொன்னையா வென்னுஞ்
சீரியோன் வந்தடி வணங்கப்
பெற்றனற் கருள்செய் தடிமைகொண் டாண்டே
பிறங்கவீற் றிருந்துமற் றயலா
ருற்றும்வேண் டியவற் புதப்பெரு மாட
லுஞற்றியு முறுபிணி தவிர்த்தும். (9)

---

* உலகநாத சுவாமிகள் முப்பத்தொரு வயது வரையில் இல்லறத்தே யிருந்ததாக யூகிக்கப்படுகின்றது. திருமண முதலியவற்றின் விருத்தாந்தம் ஒன்றும் புலப்படவில்லை.

வேறு.

ஆண்டறுபா னிரண்டதனி லணிப்புதுவை நகர்க்கேகி
யீண்டுபுகழ் தருமிரா மச்சந்த்ர வெழிற்கோமான்
காண்டகுமன் பொடும்வணங்கக் கருத்திணுறும் வரங்களெலாம்
வேண்டியவேண் டியவாறே விளங்கிடமே னமையினளித்தும் (10)

---

இவ் வடிகள்பால் ஞானோபதேசம்பெற்ற சிவகங்கைப் பொன்னை யாச் சுவாமிகள் அடிகள்மேற் பாடியருளிய செந்தமிழ்ப் பாக்கள் அளவின்றி யுள்ளன. அவற்றுள் அடிகளின் விருத்தாந்தத்தைச் சிறிது புலப்படுத்தும் ஒரு பாடலை அன்பர்கள் அறியவேண்டி யீண்டுத் தருகின்றாம்.

(இருபத்து நான்கு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.)

அங்கமிகு மானகள வருடப்புல் வயலிலே
யமர்சுப்ர மணியபிள்ளை
யருந்தவ மிருந்துகுப் பாயிதிரு வுந்தியில்
அவதரித் தந்நகரிலே
அழுகாக நாட்டுக் கணக்கெழுதி யுலகநா
யகிபதத் தன்புகூர்ந்தவ்
கவளருளி னற்சுத்த மெஞ்ஞான நிலைபெற்றும்
ஐபா றிரண்டுவருடம்

பொங்கமிகு வாய்ச்சருவ சித்திவரு டத்திலே
புளகிதம தாயெழுந்து
புதுமையாய்ச் சிவகங்கை நகர்வந்து வீரமா
காளியிரு பொற்பதத்தைப்
போற்றிவள்ர் பொன்னையன் கண்டடிமை யாகிடப்
பூவுலகெ லாந்துதிக்கப்
பொருந்தியதில் மூன்றுபத் தொருவருட முஞ்சென்று
போய்க்கால யுத்திவருடம்

இன்னவகை யேழாண்டங் கெழுந்தருளித் திகழ்காலை
பன்னரிய பண்டிதஞ்செய் பங்காரு தாசரியாம்
நன்னயமார் மாமனுட னோடாறு மேருதல்போல்
மன்னுபுக ழோங்குமிரா மைபமா தவனொருநாள் (11)

புதுவைநகர் தனக்குமா துலனோடும் போதருவான்
கதியுறவே சுழல்கொள்ளி வட்டமுடன் கறங்கெனவே
வதியுறுமேழ் பிறவியெனும் வாரிதியைக் கடப்பவனத்
ததியடைந்த சுபநிமித்தந் தனையாவர் புகழ்ந்துரைப்பார். (12)

---

எங்கும்ப்ர காசமாய்ப் புதுவைமா நகருக்
கெழுந்தருளி யெழுவருடம்
இந்திர னெனுமிரா மச்சந்த்ர மகாராசன்
இணையிலாப் புண்ணியத்தால்
இணையடி வணங்கவும் சகமெலாம் புகழவும்
ஏற்றவா றுங்கொடுத்தே
இயல்புறு குரோதனச் சம்வற் சரத்தினில்
இனியபங் குனிமதியினில்

துங்கமிகு தேதியிரு பத்தெட்டி லாதித்த
வார்முஞ் சூரியன்போய்த்
தோன்றுநா ழிகைபன் னிரண்டினில் உத்திரா
டத்தமா பக்ஷநவமி
சுகாதீத வஸ்துலக நாதகுரு பரன்மிகுஞ்
சொல்லொணாப் பேரின்பமாய்த்
தோற்றமீ றின்றியே சுட்டிறந் தெங்குமாந்
தொன்னிலை யடைந்தனன்ரோ.

---

இச்செய்யுளால் உலகநாத சுவாமிகள் புதுக்கோட்டையில் சாலிவாகன சகாப்தம் ௲எ௱அ௰எம் வருடமாகிய குரோதன ஆண்டு பங்குனித்திங்கள் இருபத்தெட்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை அமர பக்ஷம் உத்திராட நக்ஷத்திரம் இரவு பன்னிரண்டு நாழிகைக்குமேல் நவமி திதியில் திருவருள் நிலையடைந்தனர் எனத் தெரியவருகின்றது.

அடுத்தனனற் புதுவைநக ரகத்துவகை வெள்ளமென
மடுத்திடநன் மாமறைோ மனத்தினருள் விளைந்தோங்கத்
தொடுத்தவிழிப் புனல்துளிப்பத் தோன்றுறுமெண் பிறவியினி
விடுத்திடுஞா னாசிரியன் மேவுமிட மிஃதெனவே. (13)

வேறு.

உம்ப ராலள விடற்கரு முலகநா தப்பே
ரெம்பி ராலெழுந் தருளிட மேதுமு னெரிவாய்ப்
பம்பும் வெண்ணை போற் படுமன முருகவீ ரிரண்டாஞ்
சம்ப வந்தெறுஞ் சத்திநி பாதமெய் தினனால் (14)

பித்தி தாமெனப் பிறர்நகைத் திடவரு நான்காஞ்
சத்தி யும்பதிந் துண்மைபா மறிவினைச் சார்ந்தே
பொத்து மும்மலத் தஞ்சியே சுமைபினைப் பொறுப்போ
னொத்து வந்தடைந் துற்றனன் சந்நிதி யுவந்தே. (15)

அடைந்த மாதவ னடிகளைக் கண்களாற் கண்டான்
தொடர்ந்த பாசமில் லுலகநா தப்பெருந் தூயோன்
மடந்தெ ழும்பிரா னையவேள் பக்குவ மதித்தே
படர்ந்த நல்லருட் பார்வைசெய் தகமுக மலர. (16)

கைக ளாற்பிடித் தணைத்தனன் மார்புறக் கதலிச்
செய்ய வான்கனி திருக்கரத் தாலுரித் தருத்தி
மெய்யெ லாந்திரு நீறுதை வந்தனன் விடுத்தான்
துய்ய னாகின னிருவினை மும்மலந் தொலைந்த (17)

உண்மை ஞானமா மலர்மலர்ந் துயர்சிவ மணங்கான்
றொண்மை யாகிய தன்னையுந் தன்னுளே யொளிருந்
திண்மை யாகிய சிவத்தையுங் கண்டனன் றிகழு
மெண்மை யாகியாங் கணும்பர வெளியதா யிலங்க (18)

தன்னைக் கண்டிலர் யாங்கணும் பரவெளி தானாய்
மன்னக் கண்டனர் மண்ணின்மேற் புரண்டன ரெழுந்தார்
துன்னிப் பாடின ராடினர் தொழுதனர் துதித்தார்
*என்னைக் காணிய வோவிவ னெழுந்ததென் றழுதார். (19)

* என்னைக் காணியவோ என்றது, நான் என்னை யறியும்படி செய்யவோ வென்னும் பொருள்பட நின்றது.

பாலர் பேயருன் மத்தராய்ப் பகருமுந் நிலைபோய்ச்
சால வுந்தனி நிலைபடைந் தாங்கணுற் றொளிரு
மாலி லாப்பெரு மருகரை மயக்கமெய் தினரென்
றேல மாதுலன் றுனமைத் தேகலுற் றனனால். (20)

உளங்கொ ளூர்தவத் துலகநா தன்றனை யோங்குங்
களங்க மின்றிய வன்புடன் வணங்கியெக் காலுந்
துளங்க லின்றியே யேகுமா றெனப்பணிந் துயரும்
புளிங்க ளூருடன் சென்றனன் றன்பெரும் பதியே. (21)

வேறு.

வாலி தன்னின் மறைமுகை கோடிதான்
மேவி னுங்கதி ரோனொளி மேற்படிற்
பாவி டும்பக்கு வத்தரும் புன்றியே
யாவு மேமலர்ந் தவ்வுழி நாறுமோ. (22)

உபதேசம் பெற்ற படல முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 153.

## வெளியேறு படலம்.

வேறு.

கருணை யோருரு வாமிரா மையவேள் கருத்தும்
பெருமை யாருமெய் நிலைமையு மறிந்திலன் பேணு
மருமை மாதுலன் பயித்திய மடைந்தன ராமென்
றொருமை யோர்நெல் வயித்திய முஞற்றன்மே யினனால். (1)

எல்லி டைக்கடி யர்கண்வாய்க் கரையின்மே லிலங்கும்
வல்ல சொப்பிடா ரித்தனி யாலயம் வதிந்தும்
அல்லி டைக்கண்டி யான்குளக் கரைதனி லமரும்
புல்லும் வாரண முகனையக் குளந்தனிற் போட்டும். (2)

இனைய வாறியற் றிருவரிச் செயலினை யறிந்தே
புனையு மாதுலன் கரைதனி லைங்காப் பூத்தேள்
தனையவ் வூருணி தனிலிருந் தேற்றுவன் தகைசால்
நினைவு றுஞ்செய லின்னண நிகழ்ந்தன நெடுநாள்.




இப்பெ ருஞ்செய லாவிரா மையவேட் கியப்பு
மப்பெ ருந்தனி மயக்கமோங் கியதென வனியா
யப்பெ ருஞ்சிகிச் சையுமதி கப்புரிந் தறவே
*குப்பெ ரும்மியற் றினன்வெளி யேகொணுக் குறிப்பால். (4)

வேறு.

கருவாதனை யில்லார்சிறைக் கண்ணார்தரு காலை
வருமாமதி யாமைப்பசி தனின்வந்தது மகிழும்
பெருநாளென வுலகம்புகழ் பெற்றித்தனி நாளாந்
திருவோங்கிய தீபாவளி யெனுநற்சுப தினமே. (5)

வேறு.

பூணாரு முலையுமையாள் பாகனடி மறவாத
புனித ரென்றும்
†எணாருந் தேக்காட்டூர் தனில்வாழ்வே ளாண்டலைவ
ரின்ப மோங்கும்
வாணாதி ராயமுரு கப்பவே ளாளரெனு
மகிப ரந்நாள்
மாணாரும் பங்காரு தாசரியைக் காணவவண்
வந்துற் றாரால். (6)

வந்தவே ளாண்டலைவர் வள்ளலுயர் நிலையுணர்ந்து
மனத்தின் மாழ்கி
அந்தோவிங் கிவர்பெருமை யறியாம லிழைப்பதனி
யாய மென்றே

*கு-தடை. பெரும்-பெரிய. பெரியதடைபுரிந்தனனென்க.
† எண்-பெருமை.

இந்தனைசெய் தக்கணமே சிறைநீக்கி நீராட்டிச்
சிறக்கு மாடை
முந்துறுமன் பினிற்புனைந்து முகமனுடன் சிற்றுண்டி
முறையிற் பெய்தே. (7)

சிற்றுண்டேவற் றருள்கவென வுபசரிப்ப வேளாளர்
ஒசபலு மன்றா
குற்றபெரும் பத்திமையுங் கண்டடிக ளுளமகிழ்ந்தே
வுண்மை நீங்காப்
பெற்றியினங் கவர்வேண்டு தற்கிரங்கிச் சிறிதருந்திப்
பெரியோ னன்றே
சுற்றமுட னந்நகரைத் துறந்துவெளி யேறினனாற்
றாயோர் போற்ற. (8)

வெளியேறு படல முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 161.

---

## அற்புத லீலைப் படலம்.

---

வேறு.

ஓங்கு மாதவ ளுமிரா மையவே ளுறங்கிய தியதின்றி
யாங்க ளுந்திரிந் தமரிட மினைத்தென வறியொணா வகைமேவித்
நீங்க தின்றிய யாவரே யாயினுந் திகழ்தரும் விழைவோடும்
பாங்கி னல்லுணா வளித்திடி னுண்டுரை பகருவ தின்றாகி. (1)

பாரெ லாமொரு பாயலா யுடையிடை பரித்தலு மிலவாகச்
சீரெ லாந்தருஞ் செல்வரா யாண்டுகள் சிலசெலச் சிவகங்கை
யூரெ லாம்புகழ் நகரின்வந் துற்றன ரோதுமா துலனோராண்
டேரு லாந்தனி மருகனைத் தேடியுங் கண்டில னேசற்றான், (2)

வேறு.

சிவகங்கை தனில்வாழு மணவாள தாசனெனத்
திகழ்நா மத்தோ
னவமனுகாத் தவமுடையா னடிகளைக்கண் டடிபணிந்து
னடியே னெய்தல்
பவமகன்ற நிலையோவன் றேவருள்வா யெனப்*புளிதான்
பழுக்கு மோநற்
சிவமுணர்ந்தோய் மாப்பழுக்கு மோவுரைப்பா யெனவணங்கிச்
செப்பி நின்றான். (3)

அவ்வுரைகேட் டனுமடிகள் தாசனைப்பார்த் திட இன்ன
மந்நா ளெய்துந்
திவ்வியநந் நிலைபுளியே பழுக்குமெனச் செப்பினர்த்
தினத்திற் றாச
னிவ்வுலக நீத்தின்ப மெய்தினனந் நிலைமையினை
யினிதிற் கூறுங்
கௌவையிலா ராமைய மாதவனே யல்லாது
கணிப்பார் யாரே. (4)

வேறு.

மற்றொரு தினங்கோ முட்டியி னினத்தான்
வரையிலா வகந்தைகொண் டுள்ளான்
செற்றமிக் குளதே வேந்திரன் செட்டி
யெனுமொரு செருக்குறுந் துறவி
உற்றவ னங்கு வரும்பெரி யோரை
யோங்கவ மதிப்புட னும்
பெற்றியா னடிகள் தமையுமா ராய்வான்
பெருங்குற டொன்றினை யெடுத்தே. (5)

* புளிப்பழுக்குமோ மாப்பழுக்குமோ வெனவினயது, அந்திய நிலையில் உலகப்பற்றின்றி யுயிர்துறப்பேனு அன்றி யுலகப்பற்றுடன் மரிப்பேனு வெனுங்கருத்துடன் வினயதென்க.

நெருப்பினுட் செருகிப் புறத்தின்வந் தடிகள்
 நேர்முக நின்றுநீ யாவன்
இருப்பதெந் நகருந் நாமமே தற்ற
 தெவனுரைத் திடுதியட் சிணியோ
கருப்படுந் தொழிலோ மந்திர மோநீ
 கற்றதெ னுலகினர் தம்மை
விருப்புடன் வஞ்சித் துதரமோம் பிடுவான்
 வேண்டியிவ் வேடமெய் தினையோ. (6)

உள்ளவா றுரைத்தி யல்லவே லுண்மைத்
 துறவியோ வுரைத்திலை யேலுன்
கள்ளமிங் கெவருங் காணநற் றீப்போற்
 காய்ந்தவிக் குறட்டினாற் சுடுவேன்
தள்ளுவா ரிலையென் றகந்தையோ டுரைத்தான்
 சாந்தமோ டடிகளு நகைத்தே
எள்ளலொன் றின்றி யிருந்தனர் கண்டா
 னிகழ்வுறு மகந்தைகொண் டுள்ளான். (7)

வேறு.

அக்கினியிற் காயவைத்த பெருங்குறட்டி னிடஞ்சென்று
 னடிப்பா கத்தைப்
பக்குவமாய்ப் பிடித்துமே லெழத்தூக்கப் பழுவாகிப்
 பதைக்கச் சூடு
மிக்கதுசண் டொருசாக்குத் துண்டதனாற் சுற்றியெழ
 மேலுந் தூக்க
அக்கணமே வெடுக்கவிய லாக்கனமாய்ச் சூடுமதி
 கரித்த தன்றே. (8)

பதைபதைத்துக் கரத்தினையப் புறமெடுத்தை யுறவெய்திப்
 பார்த்து நின்றான்
வதிகுறடுங் குருடாக மூடாகப் போயிற்றே
 வழியின் கொண்டு

புதியபுகை யருந்திடவேண் டுங்குறட்டுத் தீயையெனப்
புகன்று பின்னுந்
துதிபெறுமெம் மடிகள்*பொடிக் காவலா வெனக்கூறித்
துலங்க நக்கார். (9)

இன்னபெருஞ் செயலினைக்கண் டஞ்சிமன நடுங்கியிவ
ரெம்மை யாளு
முன்னவரே யெழின்ஞான மூர்த்தியே யாகுமென
முன்னி யோங்கும்
வன்னமுறு மடிகளின்வீழ்ந் தடியனறி யாதியற்றும்
வன்கட் பொல்லா
வின்னலுறும் பிழைகளெலாம் பொறுத்தெனையாட் கோடியென
விறைஞ்சி நின்றான். (10)

அடிகளுமாங் கிருந்தொன்றும் விடைபகரா தெழுந்தேகி
யடியர் போற்றுந்
திடமுறு†வா னரவீர மதுரையெனுந் திருநகரிற்
சென்று சின்னா
ளிட்முறவோங் கியவாட லினிதியற்றி யமர்ந்தருள
வெழிற்புத் தூர்வாழ்
மடமிகந்த பெரியோன்சி வானந்த வடிகளவண்
வந்துற் றாரால். (11)

வந்துபிரா மையமா தவனடியின் வீழ்ந்துதுதி
வழங்கி நாயேன்
பந்தமறும் படியருள்வா யெனப்போற்றப் பக்குவமும்
பரிசு நோக்கிச்
சிந்தமகிழ் வுடன்பிரா ணாயாமஞ் சித்திபெறத்
தெருட்டி வேண்டும்
நந்தலிலா வுபதேசம் புரிந்தடிமை கொண்டனரால்
ஞான மூர்த்தி. (12)

*பொடிக்காவலா-பொடி வேணும். இது தெலுங்குச்சொல்.

†வானரவீர மதுரையென்பது:—இக்காலத்தில் மானமதுரையென் வழங்குகின்றது.

வேறு.

அல்லிடை நடுநிசி தன்னி னுயிரம்
வல்லதீ வர்த்திகள் வயங்கிச் சூழ்ந்திட
நல்லதோர் சிவிகையி னரர்ப யின்றிடா
வெல்லையி னேவுலா வுவரெஞ் ஞான்றுமே. (13)

கோடிசூ ரியப்பிர காசங் கூடியே
நீடுமவ் வொளியினை நிசிக்கண் கண்டவர்
தேடியாங் கெய்திடிற் றீப மின்றியே
நாடுறு மடிகளார் நடைக்க ணண்ணுவார். (14)

இவ்வகை யாடல்க ளெண்ணி றந்தன
எவ்வழி லடிகளா ரினிதி னூற்றிய
அவ்வகை யளந்தறிந் தறைய வாயிரஞ்
செவ்விய சிரமுடைச் சேடற் காகுமோ. (15)

வேறு.

அன்புறு மடியார்க் கிட்டகா மியங்க
ளருளியுங் கொடும்பிணி தவிர்த்தும்
பின்புறு நிகழ்வை முன்பறி வித்தும்
பெருவிட மகற்றியும் பிறராற்
றுன்புறப் புரியுஞ் சூனியம் பெயர்த்துந்
தொல்லையா மல்லலைத் துறந்தும்
இன்புறச் சித்தி யினிதளித் தாண்டு
மெளியவர்க் குயர்பொரு ளீந்தும் (16)

வேறு.

பூமியினுட் புதைபொருளைக் காட்டியெடுப் பித்துமினும்
பொருந்து மாடல்
தாமளவி லாதியற்றிச் சாரிடமாஞ் சிவகங்கை
தன்னை யுற்ற
நாமமுறு வானரவீ ரப்பெயர்மா மதுரையெனு
நகரு நீங்கி
ஏமமுறும் பலவாண்டு செலப்பரம்பக் குடிநகர்
மெய்தி னூரால், (17)

வேறு.

பாம்பக்குடி யெழுவேனஸ்வா முதலாகிய பதிகள்
திரமுற்றுறை வாரோர்பகல் திகழ்காலையி லெழுவேனஸ்
வாமிக்கொரு திருவீதியின் வருவார்தன தொருகால்
பெருகத்தனி நாகங்கடித் ததுமற்றது பிறழ. (18)

வேறு

கடிவா யதனி லிருந்துவிடங் காலுந் தனது வாயெடுக்க
முடியா திழுபட் டுக்கொண்டே முயங்கி வருமக் காட்சியினை
நெடிய வீதி தனிற்கண்டோர் நெஞ்சம் பதைத்திங் கிஃதென்னே
அடிகே ளென்ன வதற்குநகை முகத்தோ டைய னறைகுமால். (19)

அஞ்சா தீர்நஞ் சோதரனே
யடியைப் பிடித்திங் ககலாமற்
செஞ்ச வேகம் மோடேனுய்த்
திகழ வருகின் றுனென்ன
நஞ்சு பிலிற்றுங் கடிவாயி
னுகந் தனையங் கிழுத்தெறிந்தார்
தஞ்ச மெனவவ் வீதியினிற்
சாருங் காட்சி தனையறிந்தோர். (20)

வேறு.

இன்ப நல்கு மிராமைய மாதவன்
தன்க ணைத்தரி யாதிமைத் தார்வரால்
முன்ப தாகுமக் காரணத் தான்முறை
நன்மை யாக நவில்பெரு நாமமே. (21)

வேறு.

இமிட்டுக்கண் சாமியெனச் செப்புவா ரப்பெயரு
மிமைகொட்டுங் காரணத்தா லேற்றதெனப் போற்றிடுவா
ரமைவுற்ற வாடலிதே டாண்டுசில வந்தகரிற்
சுமைவுற்றுங் கெழுந்தருளச் சார்வுறுநாட் களிலொருநாள், (22)

வேறு.

எழுமேனஸ் வரத்தின் வைகையின்கீழ்த்
திசையி னிலங்கு மொருகடிகை
யிமையுந் தூரந் தனிற்சுடுகா
டாகுங் காக்காத் தோப்பதனிற்
றிமிர முறும்பாழ் மண்டபத்திற்
றினமு மிரவிற் சென்றமர்வ
ரெமையா ளடிக ளென்றுமித
னலங் கொளியொன் றெய்திடுமால். (23)

விண்ண ளாவி மிகப்பெரிதாய்
விளங்கு மொளிதா னருள்ஞான
வண்ண வொளியோ யோகத்தான்
மனத்தே தோன்றிப் பெருகிவெளி
நண்ணு மொளியோ திருவுருவி
னலமா ரொளியோ வினைத்தெனயா
மெண்ணும் படித்தன் றவ்வொளியி
னியல்பை யாவ ரிசைத்திடுவார். (24)

என்று மில்லா திவ்வொளிதா
னிடையிற் சிலநா ளாத்தோன்றல்
நன்று புரியந் நகர்மாந்தர்
கண்டா ரிரவி னடுக்குற்றார்
தொன்று முறையி னுளதன்றே
சுடுகா டதனிற் றோன்றுமொளி
மன்ற விஃதென் னேபுதுமை
யறியோ மென்ன மாழ்கினரால். (25)

வேறு.

கண்டவரந் நகரினுள்ளார் யாவர்க்குங் காட்சியினை
விண்டனர்மந் திரசித்தி மிகவல்லார் நால்வரெழுந்
தண்டமளா வியவொளியை யறியமனே திடமுடனே
கொண்டனரால் வழியிரவிற் குறித்தவிட மேகவென. (26)

பட்டுறாற் காரரெனப் படுமொருநால் வரும்புறங்கா
டெட்டனுமவ் வொளிமறைய வேதம்வரு மென்றுமனந்
தட்டழியத் தடுமாறித் திரும்பினரத் தகுதியொடு
மொட்டியுசின் ஞேளக வுறுநாளி லாங்கொருநாள், (27)

வேறு.

எப்படியு மின்றவனுற் றிலங்குமொழி யிரகசிய
மறிவோ மென்று
ஒப்பறுமந் நால்வர்களுந் தற்காப்புந் திசைக்காப்பு
முனுற்றி மேவி
யப்பரிசே காக்காத்தோப் படைதலுமவ் வொளிமறைய
வஞ்சா தேகிச்
செப்பரிய பெருமைபிரா னையுவே ளெதிர்வரலுந்
திகைப்புற் றாரால். (28)

இந்தநடு நிசியிலிவ ரெங்கிருந்து வருகின்றா
ரிவரோ நம்மு
ரெந்தவிடத் திலுந்திரியுஞ் சிமிட்டுக்கண் சாமியா
ரிவனுற் றேங்கி
வந்தவொளி தனக்கிவரே காரணமாஞ் சித்தரைப்போல்
வயங்கு கின்றார்
நந்தலிலா திலுமறிவோ மெனவைகை நதியடைந்தே
நயந்து நின்றார். (29)

அடிகளுமவ் வாற்றின்வழி யேவருண திசைநோக்கி
யடைந்தாங் குள்ள
கடிகையொரு தூரமதிற் காணுமெமு னேஸ்வரத்தின்
கண்வா யுற்று
இடிதலிலாப் பெருங்களிந்துக் கரையேறி நின்றிடவு
மேகு நால்வர்
திடமுடைய கரையருகி னடர்ந்தசிறு பனங்காவிற்
சென்று நின்றார். (30)

வேறு.

கண்வாய்க் கவிக்குக் கரைநின்ற
கருணை மூர்த்தி மறையவவண்
உண்மை யறிவான் மறைந்தற்ற
வொருநால் வருமாச் சரியமுடன்
திண்மை யுறமக் கரையேறித்
திசையெங் கணும்பார்த் தனர்கண்டார்
கண்வாய் நிறைபத் தண்ணீருங்
கரையை யடுத்த நிலப்பயிரும் (31)

என்னே வீதிதிற் றிரசால
மிக்கண் வாயின் கரையடுத்த
பின்ன மில்லா வயல்களின்வான்
பயிரே யன்றிப் பிறங்கவிலா
வின்ன தாநெற் பயிர்விளைவு
மேரிப் பெருக்கு மின்றெய்தல்
முன்ன மறியாக் காட்சியென
மொழிந்தாச் சரிய முடனின்றார். (32)

வேறு.

அவ்வளவே வொருமின்ன லடிகளரு ளாற்றோன்றி மறைய வாங்கட்
செவ்வினைங் நால்வர்களுந் திகழ்தருமின் னலிளொளியாற் சோர வீழ்ந்தே
எவ்வமுடன் கண்டெரியா திரவெலாம் புரண்டுகிடந் திடுக்க ணெய்தி
யவ்விடமுற் றதிகாலே யெழுந்தனர்கண் டெரியமிகு மச்ச மெய்தி. (33)

கரையேறிப் பார்த்தனரெக் காலமும்போற் கண்வாயிற் றண்ணீர் காணார்
நிரைமேவு வயல்களினெற் பயிரின்றி வான்பயிரே நிலவக் கண்டா

ருமைமேவுஞ் சிமிட்டுக்கண் சாமிதிரு வருட்சித்த
　　ருண்மை யோங்குந்
திரைசூழும் பூவுலகிற் சிவஞானி யிவர்பெருமை
　　செப்பற் பாற்றே. (34)

என்னமொழிந் திவணிகழ்ந்த நிகட்சியெலா மிவராட
　　லென்றுட் கொண்டா
ரன்னபெருந் தகுதியெலா நகரமடைந் தனைவருக்கு
　　மறிவித் தார்கள்
பின்னுமொரு தினம்பரம்பக் குடியாற்றிற் கடல்போலப்
　　பெருகு வெள்ளந்
தன்னின்முழுங் காலளவாத் தானெழுந்தேஎவ் வரந்தனக்குச்
　　சார்ந்தா ரன்றே. (35)

வேறு.

பரந்த சோலைசூழ் தருபரம் பக்குடிப் பதிவாழ்
வரந்த வாழுத்தா ளம்மனு ளயத்தெரு வதிபும்
புரந்த ராதியர் புகண்மிகும் பொற்பினு ளுபருந்
தரந்த யங்கிய தங்கமென் றொருபெருந் தாசி. (36)

இழைதது லாழுலை யிவள்சில ரேவதி னியங்கு
மழைபி னூரருள் வள்ளலை யொருதின மாலைப்
பொழுதி னில்லழைத் தேகிநற் றயிலமும் பூசி
பழுதி லாதவெந் நீரினு லாட்டியே பரிந்து. (37)

தக்க நல்லுணு வருத்திநற் சாந்தமுந் திமிர்ந்தே
மிக்க தாகிய வணிகளி னூற்றனை மினுக்கித்
தொக்க வுண்டியு மருந்தியே சுகந்தமு மணிந்து
பக்கு வத்தொடு மேகினள் பஞ்சணைக் கழைத்து. (38)

வேறு.

பஞ்சணையி லடிகளையு மெழுந்தருள்வித் தருகிருந்தின்
　　பத்தோ டாங்கண்
கொஞ்சுகிளி யெனக்கலவிக் குரியவுரை யாடினளக்
　　கொள்கை நோக்கி

எஞ்சலிலா மாதவனுங் கொல்லனுலை தனிற்கொசுருக்
கேது வேலை
நெஞ்சறிய வுரைத்திடெனப் புன்முறுவ லுடனிருந்தா
னிகரொன் றில்லான். (39)

அளவின்றி யுண்டமது மாமிசத்தா லக்கணிகை
யயர்ச்சி மேவி
யுளமொன்று மறிவொடுங்கத் துயின்றதிகா லையினெழுந்தா
ளுணர்ச்சி மேவித்
தளவொன்று நகையாள்முன் றனிறுக்குந் தாழிருக்கச்
சார்ந்தாங் குற்ற
பளகொன்றி லாவடிகள் தமைக்காணு தையுறவும்
பயமுங் கொண்டாள். (40)

தன்வயிறு பருத்துநீ ரிறக்கமுடி யாதலறிச்
சாருந் தூம்பும்
வன்மையதா யடைபட்டங் காற்றளாய்ச் சிமிட்டுக்கண்
வள்ள லார்க்கு
முன்பறியா திழைத்தகொடுஞ் செயலாலீ துற்றதெனு
முன்னி யன்னோர்
தன்பதமே யடைவனெனச் சார்ந்தனள்சில் லோருடனத்
தையன் மாதோ. (41)

வேறு.

சென்றவ ளெங்குந் தேடின ளியாண்டுஞ்
சித்தரைக் கண்டில ளியங்கி
வன்றுய ருடனீ மப்புறங் காடா
வழுத்துகாக் காப்பெருந் தோப்பிற்
றென்றுறு பாழ்மண் டபந்தனி லடிகள்
துலங்குவ தாயறிந் தவணுற்
றென்றவீழ்ந் தையன் றிருவடி யதனி
லோலமிட் டலறின ளன்றே. (42)

ஐயநின் பெருமை யறிவுறு தடியா
ளாற்றிய பாதக மனைத்து
முய்யவே பொறுத்திங் கருள்புரிந் தாள்வா
யொருசெய லெனக்கிலை யென்னச்
செய்யகண் ணீராற் றிருவடி யாட்டத்
திருவருட் பார்வைசெய் தடிகள்
துய்யபுன் னகையோ டமர்ந்தனர் கணிகை
துயரகன் றேகினள் மாதோ. (43)

வேறு.

நாகலிங்கம் பிள்ளையெனு நற்றமிழ்ப்பா வலரொருவர்
நயந்து வேண்டும்
பாகமுட னடிகளையுந் திருப்பதியாத் திரைக்கழைத்துப்
படர்ந்து மீண்டு
வேகமுடன் றனதுநகர் மேவலுமின் றளவுமிவண்
விளங்கி னோரன்
றோகையுட னுபர்பரம் பக் குடியினுாரர் மொழிந்திடவாச்
சரிய முற்றார். (44)

அமருநன் மிளகாய்த் தடவையிற் கிருமி
யதிகரித் தரித்தலிற் செடிக
ளிமையுமோர் காய்ப்பின் றிருத்தலை யடிகட்
கியம்பிவேண் டினளொரு மடவாள்
சுமைபெறக் காய்க்கும் பயிர்களென் றுரைத்துத்
துலங்குபுன் முறுவலோ டிருந்தான்
அமரரும் புகழு மண்ணலங் நாடொட்
டமருறக் காய்த்தன வன்றே. (45)

ஆற்றவு மிளகா யதிகரித் தமைகண்
டகமகிழ்ந் தாக்கனேர் கடகம்
பேர்த்துறு மிளகாய்ப் பழங்களை நிறைத்துப்
பொருக்கெனச் சிரந்தனிற் சுமந்தே

ஏற்றமிக் குளபே ரன்புடன் போந்தா
ளிலங்குமம் மடவா லடிகள்
தோற்றமார் தூய சந்நிதி யதனிற்
சொரிந்தவ ளின்றுநேர் துதித்தாள். (46)

வேறு.

துதித்தலு மாதவன் றன்பமி லாமல்
உதித்தவ ளன்பையு முண்டிடு வான்போற்
றிதிப்புட னுற்றெனத் தின்றன னங்கட்
பதித்திடு மிளகாய்ப் பழங்களை யெல்லாம். (47)

பக்குவ முடனப் பழங்களை யுண்ணு
மக்கண முதலா வடிகளை யாரும்
மிக்குறு வன்பின் விளங்கிடு நாமந்
தக்கநன் மிளகாய்ச் சாமியென் றறைவர். (48)

அடிகளை யாவ ரழைப்பினு மவரோ
டுடனுற வேகுவ ரோரொரு கால்நே
ரிடமுற வேகுவ மென்றுரை செய்வார்
பொடிதரு வாயெனப் புன்னகை புரிவார். (49)

வேறு.

இனையபெரு மாடல்க ளியற்றியெம தையன்
அனையதிரு மாநக ரமர்ந்திடுதல் கண்டே
மனமுறுப ரம்பநகர் மற்றதன யற்பேர்
வனையுமெமு னேஸ்வரம் வதிந்துறையு மாக்கள். (50)

சூழ்ந்தடிப ணிந்திடுவ ரென்றுமிடை துன்னி
யாழ்ந்தபெரி யோனுமிக் தல்லலென வுன்னி
வாழ்ந்தநகர் நீங்கிமிகும் வண்மையறி வென்றும்
போழ்ந்தவினை யான்குடியெ னும்பதி புகுந்தார். (51)

வேறு.

மெய்யாருந் தனதருமை சிறிதுமறி யாத்துருக்கர்
விரும்பி வாழுங்
கையாறி லாவினையான் குடிநகரந் தனில்மர்ந்தே
களிப்போ டாங்கண்

மொய்யாகத் தமதிடமுற் றிடுவோரை யடிகள்நகை
முகத்தோ டென்றும்
நொய்யாக வேமஞ்சிப் பொடிக்காவ லாவெனவே
நுவல்வ ரன்றே. (52)

திருக்கரிசி தறிந்துமிள காய்ப்பழம்பா ஷாணமிவை
துறையச் சேர்த்து
நெருக்கிநறுந் துகளாக்கிப் பொடியெனச்சென் றடிகள்கர
நிறைத்து நிற்பர்
விருட் புடனப் பொடி தனையு மிருநாசி தனக்கேற்றி
வெறுப்பொன் றின்றி
யிருப்பாளித் தவரெய்து மின்னலினை யாவரே
யிசைக்க வல்லரர். (53)

வேறு.

இளையான் குடியை யடுத்ததிரு வெள்ளறு ரென்னு மெழில்நகருக்
கொளியா ரடிக ளொருதினஞ்செல் லலுமாங் குறும்பே ரிருதுருக்கர்
எளியா ரெனச்சென் றிருபுறனு மெய்திக் காந்தொட் டீர்த்திகழ்ந்தே
மிளகாய்ச் சாமி வாருமென மிகவு மிடுக்கண் விளைத்தனரால். (54)

வேறு.

சீற்றமுட னடிகளடா முரடரே யெனவுதறிச்
சேரத் தள்ளிக்
காற்றெனச்சென் றனர்வெள்ளூர் தனையடைந்தங் கையனு
லயத்தின் கண்ணே
வீற்றிருந்தார் வீழ்ந்தமிலேச் சருமிருகண் டெரியாமல்
மிகவு மாழ்கி
ஆற்றவொணு மயக்கமுடன் கிடந்துபுரண் டனராங்க
ணவதி யெய்தி. (55)

கண்ணிழந்தா ரிருவரையுங் கொடுபோந்தங் கையனு
லயத்தின் கண்ணே
வண்ணமுறு மடிகளைக்கண் டுறவினர்கள் வணங்கியிரும்
வன்கட் பொல்லர்

வெண்ணமுதீளா மையுமடிக்கீழ்க் கிடத்தியிய ரிழைத்தபெரு
மேத மெல்லாந்
திண்ணமதார் பெரியோனை திருவருளாற் பொறுத்தியெனச்
செப்பி நின்றார். (56)

திருவெள்ளறு றுறை மாந்தர் செய்தியறிந் தாங்கணுறச்
செறிந்தா ரென்றும்
மருவொன்றுங் குருடரைப்பார்த் தடிகள்சிறு நகையுடனே
வயங்கி மீண்டும்
இருமுறைசந் தோடமென வியம்பலுமவ் விருவருங்கண்
ணெய்தி னார்கள்
தருமுறைகண் டுவகையுடன் சாருமுற வினர்களெலாந்
தரையிற் றாழ்ந்தார். (57)

பணிந்துசருக் கரைவாங்கிப் படைத்துவிநி யோகித்துப்
படர்ந்தார் பின்னாள்
உணர்ந்தபெரி யோனவணுற் றெச்சந்தட் டியர்வள்ளக்
குளமோ டொன்றும்
அணிந்தஅற மனகரையே யிவைமுதலாம் பதிகளடைந்
தாட லாற்றித்
தணந்தவினை யான்குடியிற் சார்ந்தடுத்த சாலைபுதூர்
தங்கி னானல். (58)

சாலையெனுஞ் சிற்றூரிற் பனையோலைச் சாவடியிற்
சார்ந்தாங் குள்ள
சீலமுறுஞ் சிறுவறையிற் சென்றுசய னித்திருப்பர்
தினமீ தாய்ந்த
ஏதுமதி யில்லாத அருக்கர்சில ரிரவிங்க
ணெய்தி யாங்கண்
தாலமெலாம் புகழடிகள் தமைக்கண்டா ரிழைத்தனம்பேயன்
சாற்று வேனால், (59)

வேறு.

அறைதனின் வந்தங் கொருபொதி மிளகா
யடிகண் மேற் குவித்தனல் கொளுத்தி
உறைகபா டத்தா றிறுக்கிமுட் படலா
லுளவெளி வாயிலுஞ் சேமித்
தறையுமேற் கூரை யினுநெருப் பேற்றி
யகன்றன ரடிகளின் றவமாங்
குறைவிலா ஞானக் கொழுங்கனன் முன்னங்
குறுகுமோ கொடியரென் னறிவார், (60)

சாவடி வெந்து கரிந்தன வடிகள்
தமக்கொரு தீங்கதின் றாக
மேவினர் வெளியெவ் வழியினோ வறியே
மிக்கவக் கணமனற் கொளுவும்
பாவிக ளுடலம் பதைக்கமுன் புகவிப்
பண்ணவன் றன்மடத் தீச்சென்
றேவலிற் செழிய னுடலடைந் தாற்போ
லெரிந்தன வெப்புநோ யாகி, (61)

வெப்புநோய்க் காற்றா தலறினர் வீழ்ந்து
மிகுமுற வினரெலா மனுகத்
* துப்பதொன் றின்றித் துளங்கியிச் சுரநோய்
†சுதந்தரு மெனவகத் தையுற்
றெப்படி யிங்கோ வெய்திய தெனக்கேட்
டின்னலுற் றறிந்துதம் பள்ளிக்
கொப்பறு மாரா தனம்புரிந் தாங்க
ணுறும்வயித் தியமெலா முஞற்றி, (62)

தொழுங்கட னாற்றிப் பலபரி காரந்
தொகைமுறை புரிந்துமச் சுரநோய்
கொழுங்கனன் மிசைமிக் கெழுதுபெய் தென்னக்
கொழுந்துவிட் டெரிதாத் தரியா

* துப்பு—வலி. † சுதம்—கேடு.

தழுங்குமக் கொடியோர் களைச்சுமந் தடிக
ளமரிடந் தன்னின்வந் தடைந்தே
வழங்கருட் பெரியோன் றிருவடிக் கீழ்வ்
வஞ்சரைக் கிடத்திமுந் நின்று (63)

வேறு.

அண்ண லீங்கிவ ரிழைத்தமா பாதக மனைத்தும்
எண்ணி னென்றுமோ ருய்தியின் றென்னினு மெய்தும்
உண்ணி கழ்ந்தபே யறிவிலாச் சிறியரென் றுன்னித்
இன்ன மார்பிழை பொறுத்தருள் வாயெனச் செப்பி. (64)

பணிந்து வேண்டின ரடிகளும் பாதகர் தமைப்பார்த்
தணிந்த புன்னை புரிதலு மக்கணஞ் சுரநோய்
தணிந்தெ ழுந்தனர் தகவிலாப் புன்மையோர் சாருந்
திணிந்த வாமுற வினையெலா மண்ணுலைச் செறிந்தே. (65)

எமது கண்மணி யாமிரா மையனே யென்றுந்
தமது மெய்க்குரு வாய்க்கொடு பள்ளியைச் சார்ந்தே
அமைவு றுந்திரு வாசனத் திருத்தியாங் கணிந்து
நிமிர்த ரும்பொனு டையும்புனைந் தாவண நிகழ்த்தி. (66)

வேறு.

துதைமண மலர்த்தொடை சூட்டித் துங்கமா
கிதமுறும் பலபல மினிய சர்க்கரை
விதமுற முன்படைத் தடியின் வீழ்ந்துநற்
பதமுறப் பணிந்துதம் பதிக்க ணெய்தினர். (67)

வேறு.

அந்த நாண்முத லடிகளைத் துருக்கர்க ளஞ்சி
வந்து போற்றுவ தல்லது வன்கணென் றிழையார்
நந்து தாயமங் கைப்பதி மங்கல நாட்டின்
எந்தை யாரெழுந் தருளின ரப்பதி யிகந்தே. (68)

வேறு.

பல்லா ருடன்சேர்ந் துரையாடிப் படரு மாபோன் முன்னாகச்
செல்லா நின்று ரறிந்துபினுற் றிரும்பி நோக்கி னுங்கொருவ
ரில்லா தடிகள் மோனமுட னிலங்கி வருவ ரேதமுறும்
பொல்லா விலங்கு மமைதியுடன் போமாற் பணிந்து புனிதனையே. ()

வேறு.

தாய மங்கை தனக்கணித் தாகுமோர்
மேய கீளியைந் தற்பெயர் மேவிடுந்
தூய நன்னக ரந்தனிற் றுன்பமின்
றாயு நான்மறை யந்தண *னந்தணன். (70)

விண்டு வின்சமை யத்தன் விளங்கிய
பண்டி தன்னொரு பாக வதத்தினைக்
கொண்டு தெற்றியுற் றுய்ந்தனன் கோதிலாப்
பண்ட தாகவிற் பற்றியவ் வேட்டினே. (71)

வேறு.

கறையா னரித்த திரண்டுசுலோ கங்க டெரியா தவனுயு
நிறையா மறிவு மயங்கிடவந் நெறிசேய யேகு மடிகளறிந்
திறையாங் கெய்தி யவனுணரா விருசு லோகங் களையுமொழிந்
துறைவா ரடிகள் முடிக்கணிந்தங் குறுமேப ரன்பிற் றுதிபுரிந்தான். ()

வேறு.

இசழ்தலும் புகழ்தலு மின்ப துன்பமும்
பசையுற வொன்றெனும் பண்ண வன்சிறு
நகையுட னுங்கணின் றெழுந்து நண்ணினான்
றகவுட னகமுறுந் தடத்தி னென்பவே. (73)

வேறு.

ஞானு னந்தப் பெருந்தகையார் நண்ணுந் தாய மங்கைமுதல்
ஆனு தமர்மங் கலநாடா மணியார் நகரங் களினீங்கிக்
கானுர் கடம்பா ரணியத்திற் கணித்தா கிய†பே ரணிநகரில்
நானு வகையற் புதங்களுட னண்ணு மடியா ருடன்போந்தார். (74)

* அந்தணன்—அழகிய தண்ணளியுடையவன்,

† பேரணிநகர்—பேரணிப்பட்டி,

அதரிற் புலிக்கண் வாயென்னு மச்சிற் றாரி ஞண்டிபல
இதழுற் றொளிர்வான் பெயலின்றி யிரங்கும் குடிகள் தமைநோக்கிப்
பதமிக் குளநன் மனமுழுபொழியப் பாலித் தகவை யெழுபானோர்
ததனிற் சருவ சித்தாண்டி னடைந்தா ரமர்பே ரணிநகரே. (75)

வேறு.

பேரணி நகரின் வந்து பெருமித மின்றி யாண்டுஞ்
சீருற வதிவ ராங்கண் டிகழுமோர் வணிக ஞர்தாம்
நேரிலாச் சிறைக்க ணேகு நியதிகண் டுண்மை தேற்றிப்
பேரிட ரகற்றி யாண்ட பெருமையென் புகல்வே னம்மா. (76)

வேறு.

திருக்கோட்டி யூரென்னுந் திருப்பதியி னடிகளொரு
தினத்தி னேகி
விருப்போடுஞ் சந்நிதியின் விளங்குதிருப் பாற்கடலா
மினிரு மேன்மை
*யருக்காருந் தீர்த்தமுழு வதையுமள்ளி யாசமந
மாவ ருந்தித்
தருக்கோடுஞ் சிறுநீராத் தான்பெருக்கிப் பூமனகர்
சார்ந்தா ரன்றே. (77)

வேறு.

இவ்வா ரடிகள் பூமனக ரினும்பே ரணியென் றிசைநகருந்
தவ்வா தமர்வார் தங்கையகந் தனக்கே கின்றே னெனப்புகன்றுஞ்
செவ்வாய் திறந்தா மலகவள நாட்டிற் செல்கின் றேனென்றும்
அவ்வா ரருளிப் பூமனக ரடைவார் நாளு மகங்களித்தே. (78)

அடைந்தாங் காதி மூலமெனு
மடிகண் மடத்து மாதரவிற்
குடைவார்க் கருளு மிராமதீர்த்
தத்தென் கரையுங் குலவுமத

* அருக்கு-அருமை.

னிடையா ரிலுப்பைத் தோப்புவிநா
யகரா லயத்து மேலைமடக்
*கடையு முறைவார் செயலனைத்துங்
கடையேன் கணிப்பிற் கடங்காவே. (79)

வேறு.

சீரு றத்திகழி ராம தீர்த்தவிய
மத்தி சைக்கரை யினிற்செறிந்
தேரு றப்பெருகி லுப்பை நற்கனிய
ருந்த லாமெனவு மேதமில்
நேரு றத்தனைநெ ருங்கு பச்சரிசி
ராம னென்றும்வரு நேர்மையோர்க்
காரு ணிக்கரையி ராம னென்றுமிக
வுன்ன தப்பெற வுரைப்பரால். (80)

வேறு.

அவனிபுகழ் போரணிநந் நகரமதி னடிகள்வரு
மந்நா டொட்டுத்
தவமிகுஞ்சித் திரைமதியிற் றன்வருநாள் காம்பாறு
வாரத் தன்று
உவமையிலாப் பெரியோனுக் குருபூசை யியற்றிவிழா
வொளிர வாற்றித்
தவமெதன வேயாண்டு தொறுங்குருபூ சையையடியார்
நயங்கச் செய்வார். (81)

வேறு.

அருண்மிகும் பெரியோர் ஞெருதிங்ம் பூம
ணணிநகர் மேலைமா மடத்திற்
றிருவருள் புரிந்தாங் கெழுந்தருள் செயுங்காற்
றிடுக்கென் வேகுடி யிருந்த

* கடை-இடம்.

வொருபெருங் கோவி லிடிந்ததிக் கணமே
வொல்லென மாயமா யேகி
வருவனென் றுரைத்தைங் கடிகையின் வரையு
மௌனமோ டசைவற வமர்ந்தான். (82)

உத்தம னிவ்வா றசைவறப் பூத
வுடலினின் றெழுந்தருக் குமமா
மத்தகைத் தனுவோ டேகியீன் றுளி
னந்தியக் கடனெலா மாற்றித்
தத்துவ மகன்ற முத்தியு மருளிச்
சார்ந்தனன் மேலைமா மடத்தின்
வைத்தபௌ திகமா முடலினின் மீண்டும்
வள்ளலுக் கிவைசெய லரிதோ. (83)

வேறு.

வேங்கடசுப் பம்மாளா மெல்லியலு மடிகள்வரா
விழுமந் தன்று
லேங்கிமிக வீன்றுளி னில்லமமர்ந் தாண்டுபல
வேக வேகத்
தாங்கவொணுத் தனித்துயரந் தலையெடுப்பத் தாதையுடன்
சார்ந்தா ளென்றுந்
தீங்கணுகாக் காசியெனுந் திருநகரிற் சிவனுலகஞ்
சேர்ந்திட் டாளால். (84)

நாட்டரசன் கோட்டையின்வாழ் மெய்யப்ப னெனும்வணிக
னயந்தோர் நாளின்
வாட்டமிலாப் பூமனகர் வந்திரா மையனடி
வணங்கும் போதி
ருட்டுமருட் பெரியோனும் காறிவத ன்த்தமிழ்க்
கணத்தின் ஞானத்
தேட்டமுளா னுகியனந் தெளிந்ததனை யறிந்திடந்
சிந்தை செய்தே (85)

துறவடைந்து கோவிலூர் வேதாந்த மடமேகித்
துகளி லாத
பிறவியறும் வேதாந்தப் பெருநூல்க ளறிந்துபினுட்
பெருகும் பொன்னி
நிறைவளநாட் டினிற்சிக்க லெனுந்தலத்திற் கணித்தாக
நிகழூர் தெய்வப்
பொறைமிக்க பொருள்வைத்த சேரியின்வே தாந்தமடா
திபராய்ப் போந்தார். (86)

கோவிலூ ராதீனந் தனக்காதி குருபீட
மாகக் கொண்ட
தாவிலாப் பொருள்வைத்த சேரியின்வே தாந்தமடத்
தலைவ ராகி
மேவுமருண் மெய்யப்ப ஞானதே சிகரென்ன
விளங்கி வாழ்வார்
ஆவதிது வாகிலெம தடிகளுச்சிட் டப்பெருமை
யறைவார் யாரே. (87)

வேறு.

பேலைமா மடத்திற் கருநாற் குறவர்
மேவிடுங் குடில்வழி யடிகள்
சாலவே கிடுங்காற் றங்குமக் குடிசை
தனிலொரு வாயிலி னமர
ஏலுறுங் காத்தம் மாளெனுங் குறமா
தெழிலிசா மன்றிரு மனைவி
தாலமேற் பழங்கந் தையைவிரித் ததனிற்
றனதுபெண் மகவினைக் கிடத்தி. (88)

ஏகினள் வெளியி னிலங்குசின் னம்மா
ளென்னுமக் குழந்தையை யடிகள்
பாகமோர்ந் தருகுற் றெடுத்தனர் காத்தாற்
பற்றிமார் புறவணைத் தேந்தித்

தாகமோ டிச்சி யோர்ந்துவாய் முத்தந்
தந்துகீழ்க் கிடத்தியே கினராங்
காதலிற் பருவ மடைந்துநன் மணமு
மாகிப்பு மனைவுறு ளாகி. (89)

இல்லற மிகந்து துறவடைந் தாங்கோ
ரெழின்மிகுஞ் சைவமு தாட்டிக்
கொல்லையி னடியா ளாயுப தேச
முஞற்றிடப் பெற்றபி னொளிரு
மல்லலார் பட்ட மங்கல மதனின்
மடமமைத் ததனினுற் றமர்வாள்
அல்லலி லாவா னந்தவம் மாளென்
றறையபி தானமோ டம்மா. (90)

வேறு.

அண்ண லிவ்வகை யாறெனு மாண்டுகள்
புண்ணி யத்திருப் பூம னகரினும்
எண்ணும் பேரணி யென்னு நகரினும்
வண்ண வாடல் வழங்கி வயங்கினன். (91)

ஆண்டொ ராறு மகன்றிட வேழதா
யீண்டு நல்விஜ யப்பெய ரேய்ந்திடும்
பூண்ட வற்சரம் போந்தது புங்கவன்
மீண்ட சித்தி விதமும் விளம்புவாம். (92)

அற்புத லீலைப் படலம் முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 253.

# சித்திபெற்ற படலம்.

வேறு

ஆண்டுக டோறுஞ்சித் திரைமதி நான்காம்
பானுவா ரத்தின மதனி
லீண்டுபே ரணிநன் னகருளா ரியற்று
மெழிற்குரு பூசையை யினிதிற்
காண்டகும் பூம னகருளார் மூன்றாய்க்
கழறுமா தித்தவா ரத்தின்
வேண்டுறப் புரிவான் வேண்டுவ யாவும்
விருப்புடன் சிறப்புற விளக்கி. (1)

பேரணி நகரின் வந்தடி பணிந்து
பெருமவாங் கெழுந்தரு ளென்னாச்
சீருறு மடிக ளடுத்தஞா யிறினிற்
சென்றுபூங் குடிக்கணே யடங்குங்
காரணங் கருதி யேகிடா தழைத்தோர்
கருத்துறக் *குறிப்பினை யுணர்த்தி
நேருற வாங்க ணமர்ந்தன னிரவி
னிகழுமீ ரைந்தெனுங் கடிகை. (2)

வேறு.

உச்சிப் பொழுது தொடுத்திரவி னொருபான் கடிகை யளவுமெழா
திச்சைப் படியே யிருந்தவிடத் திருப்ப வழைத்தோர் குறிப்பறியார்
†கச்ச லுடன்பூங் குடிக்கேகக் கழுது முறங்கு நடுநிசிக்கண்
மெச்சத் தகுமெம் மடிகண்மிகும் விழைவிற் பூம னகரடைந்தார். (3)

---

* குறிப்பினை யுணர்த்தியதாவது-நமது குருபூசை பெரிய குருபூசை யென்றும், ஞாயிற்றுக்கிழமை பூங்குடிக்கு ஒரே வேளையாய்ப் போவோ மென்றும் இவ்வாறு கட்டளையிட் டருளியமையை யென்க.

† கச்சல்-வெறுப்பு.

துய்ய ராம தீர்த்தமெனத் துலங்கூ ருணிக்தென் கரையதனி
லையன் றூனுற் றடங்கிடத்தே யமர்ந்தான் சுகவா சனத்தாங்கண்
செய்ய வாயுந் திகழ்*திருக்குந் திறவா துணலூட் டினுமருந்தா
தெய்யா திருந்த விடத்தினெழுந் தேகா தொருமூன் றெருதினமே.

ஐந்தா வதுநற் றினமதனி லனுகாச் சண்ட மாருதமும்
நந்தா மழையும் பெருகவத னுனு மடிக ளிருந்திடம்விட்
டுந்தா னசைவற் றமரவரு மூபர்பூங் குடியா ருளத்தஞ்சிப்
பிந்தா துயர்கா வணமமைத்துப் பெரிதுஞ் சூழத் திரைச்சீலை. (5)

ஆர்த்து முயர்பஞ் சணையமைத்து மடிக ளங்கி கரித்திலாற்
றீர்த்தன் யோகி னெழுந்தருளுஞ் செயல்கேட் டாறுந் தினமுதலா
வோர்த்த வயன்மா நகரமுளா ரொருங்கு திரளாய்க் குழுமிமிகுஞ்
சீர்த்தி மேவும் பெரியோனைச் சூழ்ந்தார் வணங்கிச் செறிவுற்றூர். (6)

வேறு.

தழங்கு மார்கழி யெனவருங் கணக்கிலாச்
சனத்திரள் களுக்கெல்லாம்
வழங்கு பூமனன் னகருளா ருண்டியும்
வழங்கிமேல் வருவோர்க்கும்
பழங்கு லாவிய வுணவுசெய் தமைத்தனர்
பகருமே முநாளின்
முழங்கு மேடநான் காவது ஞாயிறு
முயர்பெருந் திருநாளில். (7)

வேறு.

சித்தருக் காண்டு தொறுஞ்செயும் பூசைத்
தினமுமன் றூகலா னதனை
நத்தியு மடிகள் யோகினுற் றமரு
நன்மையைக் கேள்வியுற் றநங்கொள்
பத்தியின் வணங்கும் பரிசினைக் கொண்டும்
படர்ந்தன ரண்ணலா ரேகி
நத்துறு மாட வியற்றியாங் கெழுந்த
நகர்களி னுறைபெரு மாக்கள். (8)

---

* திருக்கு-கண்.

வேறு.

புதுக்கோட்டை யெனும்பதியிற் பூதலம்போற் றிடவிளங்கும்
புனித னருள்
துதிக்காரு மூலகா னதப்பெரியோன் றாயசமா
தியிற்சென் றுட்ட
மதிக்காகு மடிகளொரு வாரமுன மனுப்பியநால்
வருமன் றேகித்
திதிக்காருங் காவடியிற் செறிபாலு மாட்டியிவண்
சேர்ந்தா ரன்றே (9)

வேறு.

ஆயிர மாயிர மெனுங் கணக்ககன்
றேயணி லாச்சனத் திரள்க ளெங்கணு
மேயின திருமுறை விளங்கும் கோட்டிகள்
சேயமோ டெங்கணும் நிறைந்து சூழ்ந்தன. (10)

அரஹர முழக்கமு மடிய ரார்த்தெழப்
பெருகுறு முழக்கமும் பேணுந் தொண்டர்கள்
தருமுயர் தாண்டவத் தனிமு ழக்கமும்
வருமெழு கடலினு மதிர்ந்த வானெலாம். (11)

வேறு.

அண்டமா முகடு மதிர்ந்திட விவ்வா
றன்பர்க ளார்த்தெழ வடியேன்
பண்டுசெய் வினையும் பறித்தருள் புரியும்
பண்ணவன் பதுமவா சனமேற்
கொண்டசை வறவீற் றிருந்தவப் படியே
குறித்தரா மப்பெருந் தீர்த்தத்
தண்டுதென் கரைமே லணிகுபே ரன்றிக்
காவணி வதனமாங் கமைத்தே. (12)

திருமுக மலர்த்திப் பகல்பதி னைந்தாய்ச்
செப்புநா ழிகைதனின் மனவாக்
கொருவிய வகண்டா காரநித் தவ்யா
பகமெனு முண்மைபா னந்தத்

திருவருண் மயமாய்ப் பாத்துட ஞென்றுந்
திகழ்ந்தன ரடியரா னந்தம்
பெருகுறச் செயும்பே ராஹா வொலிபோய்ப்
பிளந்தன வண்டகோ ளகையே. (13)

வேறு.

கோவிந்த நாமசங்கீர்த் தனமொருபாற் குலவியெழப்
பாவந்த முறும்விணை பண்ணைமைதண் ணுமையுடனே
மாவந்த பல்லியமும் வகைவகையின் முழங்கநலும்
பூவுந்திச் சுரர்களெலாம் போற்றிமிகப் புகழ்ந்தனரால். (14)

சித்திபெற்ற படலம் முற்றியது.
ஆகத் திருவிருத்தம் 267.

## சமாதி செய்த படலம்.

வேறு.

இன்னண மடிகள் திருவருள் நிலைபெற்
றிரண்டறக் கலந்தமை யோர்ந்தே
பன்னருஞ் சிவகங் கைப்பதி யரசி
பரமனை யன்புடன் பணியும்
நன்னய மிகுந்த காத்தம நாச்சி
யாரெனு நங்கைதந் நகரி
லன்னரா மைய வடிகளைக் கொடுபோ
யடக்கமாற் றிடமுயன் றனளால். (1)

ஐயனைக் கடியா பட்டியிற் கொடுபோ
யடக்கம தாற்றுவே மெனவத்
துய்யநந் நகரார் சொற்றன ரென்றுந்
துலங்குபே ரணிநகர் மாந்தர்

மெய்யனை யெமது நகர்க்கெடுத் தேகி
விருப்புட னற்சமா தியினை
வையகம் புகழ வைப்பமா லெனவா
தாடினர் வந்தவா றறியார். (2)

கின்னரம் பயில்பூங் குடியுளா ரடிகள்
கேடிலா விந்நக ரமர்ந்தே
சொன்னவா றாரு ணிக்கரை யடங்கித்
துகளிலாச் சித்திபெற் றமையா
லின்னதா மிடத்தி னருட்சமா தியினை
யியற்றலே முறையென வுரைப்ப
வன்னதே யாமென் றியாவரு மாமோ
தித்தகங் களித்தன ரன்றே. (3)

வேறு.

அவ்வமயம் பூமனக ரணிமேல வளவாராந்
திவ்வியதீர்த் தப்பனெனத் திகழ்வணிகன் பரம்பரையிற்
கௌவையிலாக் கண்ணப்ப மகிபனெனுங் களங்கமிலாச்
செவ்வியவன் புறம்பெரியோன் சிவராம வள்ளலிவர். (4)

வேறு.

இருவரு மெழுந்தி ராமதீர்த் தத்து
ளிரங்கியித் தென்கரை முழுதும்
வருமிரா மைய மாதவன் றனக்கே
மனமொரு மித்தளித் தோமென்
றிருகர நிறையப் புனலினை யள்ளி
யியம்பிடும் முறையினீர் வார்த்தே
பெருமகிழ் வோடீண் டடிகளை யடக்கம்
பேணியாற் றுமினெனப் புகன்றார். (5)

அடிகளுக் கபிடே காதிக ளியற்றி
யலங்கரித் தணிவிமா னத்திற்
றிடமுட னேற்றிச் செப்பரும் பசனைத்
திவ்வியக் கோட்டிக ளோங்குர

தடமுறுங் கடல்போற் றுழுழங் கிடவுந்
தருமா ஹாரவொலி யுடனே
நடநவி லானந் தப்பெரு மார்ப்பு
நாகமுந் திசையுநண் ணிடவும். (6)

எண்ணுறு மாந்த ரெழுகட லென்ன
வெங்கணுஞ் சூழரா மைய
வண்ணலை மிளகா யடிகளை யியங்க
ளார்த்திட நகர்வலஞ் செய்வித்
தெண்ணுறக் கொணர்ந்தி ராமதீர்த் தத்தென்
கரைதனி லிறக்கியாண் டடக்கம்
பண்ணினர் சிவலிங் கப்பிர திட்டை
பரிவுட னாற்றின ரன்றே. (7)

வேறு.

அன்று கூடிய கூட்டமே சந்தையா யித்தவா றந்தோறு
மின்றுஞ் சந்தைகூ டுதல்பெருங் காட்சியா மிப்பெரு நகர்தன்னி
னென்று மண்ணவா ரடங்குமச் சாண்முதல யுயர்திரு மகளெய்தி
நன்று நல்லறங் கெனப்பெரு மகிழ்வுட னயந்தினி தமர்கின்றாள். (8)

வேறு.

சாலிவா கனச காப்தந் தக்கவா யிரத்தெண் ணூற்றின்
மேலுறும் பதினு றுமாண் டாகிய விஜய வாண்டிற்
சீலமார் மேடத் தன்னிற் றிகழிரு பத்தா றும்நாள்
ஏலுறும் பானு வாரத் தியல்கிருட் டினபக் கத்தில். (9)

சட்டியாந் திதியுத் ராடந் தனிற்பகல் பதினேந் தாக
எட்டுறுங் கடிகை தன்னி னியலுறுந் கடக ராசி
பட்டில்தா மஸமாம் வேளை வருங்குரு கால வோரை
யிட்டரா மைய வெங்கோன் சித்திபெற் றருளி னானே. (10)

சமாதிசெய்த படல முற்றியது.
ஆகத் திருவிருத்தம் 277.

# கும்பாபிடேகப் படலம்.

வேறு.

சீரோங்கு மகுடதன வணிகர்குல திலகனெனுஞ்
  செம்ம லென்றும்
பேரோங்குங் கூராண்டான் பரம்பரையிற் கருப்பனெனும்
  பெரியோ னீன்ற
ஏரோங்கு மெழில்நாரா யணன்றவமோ ருருவெடுத்தா
  லென்ன நாளும்
பாரோங்கும் புகழுடையான் பதியோங்கு நிதியுடையான்
  பகைமை யில்லான். (1)

* பருவமுகி லெனநாளும் பாவலர்க ளுளமகிழப்
  பரிவி னோங்கும்
பெருகுநிதி மழைபொழிவோன் பிறங்குகலா வல்லவனெம்
  பெருமா னாகும்
பெருமையுறுங் கோட்டிநகர்ச் சௌமியநா ராயணப்பேர்ப்
  பெருமாட் கென்றும்
உருகிடுமன் புடன்றிருவாய் மொழியோதக் கல்லூரி
  யுவந்து செய்தோன். (2)

முந்நாளிற் றமிழ்வேந்தர் மூவரெனச் செந்தமிழை
  முறையிற் காக்கப்
பிந்நாளி லவதரித்தோன் பேணிவரு வோர்க்குவகை
  பெருகச் செய்வோன்
தந்நேரி லான்சாலை தாமளவின் றியற்றிவருந்
  தகையோ னுண்மை
மெய்ந்நாளு நழுவிடா னின்னுரையான் கன்னலென
  வினிக்கும் †பண்பான். (3)

ஓங்குபுகழ் வள்ளலெனுங் கண்ணப்ப மகிபனொடு
  முர்வோ ணுதுக்
தீங்கணுகாச் செம்மலுபர் தருநாரா யணவேளுர்
  தீமை யில்லாப்

---

* பருவமுகில்—கார்காலத்துப்பெய்யும் மேகம்.

† பண்பு—குணம்.

பாங்குபெறு நயசுகுணன் கூராண்டா னையுந்தனது
 பழுதொன் றில்லா
நீங்கரிய பெருந்தவத்தா லீன்றவனின் னிலம்புகழு
 * நியம முள்ளான். (4)

பாரியங்கும் புகழ்க்குமணன் பாரியெழு வள்ளலெனப்
 பகரு மேன்மைச்
சீரியங்கு முயர்கொடையான் செம்மையுறத் திகழ்நடையான்
 செல்வர் போற்றும்
பேரியங்கும் புகழ்க்கோமான் பேணிபெனை யாதரிக்கும்
 பெரியோன் றெய்வ
நாரியங்கு நன்மனத்தான் சிதம்பரவே ளிவன்பெருமை
 நவிலற் பாற்றே. (5)

திருமருவுங் கூராண்டான் பரம்பரையிற் றனவணிகச்
 செம்ம லாகும்
அருமைமிகுந் தருவனையா னருணசலேந்திரனென்
 றவனி போற்றும்
பெருமையுறும் பெரியோன்செய் தவமுருவாய்ப் போந்ததெனும்
 பெற்றி யாள
னிருமைதரும் வேதாந்த வெழினூல்கண் முழுதுணர்ந்த
 வினையி லாதான். (6)

கற்றவர்கள் புகழ்ந்திடுநற் கண்ணப்ப வள்ளலெனுங்
 கருணை யாள
னுற்றதவத் தாலுலகி னொப்பிகந்த வயிரவவே
 ளுணர்வான் மிக்க
பெற்றியின னருணசலக்கோமா னின்னுமரபே
 பிறங்கு மேன்மை
பெற்றவனுஞ் சுப்பைய மகிபனிவர் களையீன்றே
 பேரின் புற்றான். (7)

* நியமம்—தூய்மை.

இன்னபெருந் தகுதியுளார் மூவருமொப் பிகந்தவரே
யெவ்வாற் றானும்
அன்னதா கலின்மூத்தோன் றனைப்புகழின் மற்றிருவர்க்
கமைந்த தாமென்
றின்னதா நூலினுக்கோர் காரணமா விசைந்தபெரு
மேந்த லாகும்
நன்னயமார் வயிரவவேள் பெருங்குணங்க ளறிந்தளவி
னவில்வே னம்மா. (8)

அனமிலார்க் கனமாவோன் அகமிலார்க் ககமாவோ
னமருந் துன்ப
மனமுளார்க் குவப்பாவோன் மருந்தாவன் பிணிபுடையார்
வருத்தங் காணின்
தனமிலார்க் கரும்பொருளா வோன்றந்தை தாயாவோ
னில்லார்க் கென்றும்
இனமிலார்க் கினமாவோ னெனப்பெரியார் புகன்றதற்கோ
ரிலக்கா யுள்ளான். (9)

கற்றவர்கட் கெந்நாளுங் கற்பகம்போல் வேண்டுவன
களிப்பி னல்கும்
பெற்றியினுன் பிறைபணிபெம் பெருமான்ற னடிமறவாப்
பேரன் புள்ளான்
நற்றவமார் தருசைவ நெறியுடையான் சாலமிக
நயப்பி னூற்றுஞ்
செற்றமிலான் வண்மையுறும் வயிரவவே ளிவன்பெருமை
செப்பற் பாற்றோ. (10)

இப்பெரிய சிதம்பரவேள் வயிரவமா லிருவருமே
யிசைந்தொன் றாகி
யெப்பரிய தருமமுான் னியற்றுதல்போ லிச்சரிதத்
திறைவ னாரும்
ஒப்பரிய சித்தனிரா மையமா தவன்றனக்கோ
ருவமை யில்லாச்
செப்பரிய வாலயஞ்செய் தற்சவங்கொண் டருள்மூர்த்தி
சிறப்பி னூற்றி. (11)

யானைமுகக் கடவுள்கந்த னுதிபரி வாரமெலா
மமைத்தா னந்த
மேனிமிர்கும் பாபிடே கமுமியற்றி யுற்சவமும்
விழைவி னுற்றித்
தேனமரு நந்தவனந் திருமடா லயமுஞ்செய்
சிறப்பிற் செய்தே
யானதின நித்தியமை மித்தியமும் வழங்கியா
தரிக்கின் றாரால். (12)

வேறு.

ஈங்கிவ ரிருவரு மிப்பு விக்கணே
தாங்கிய நல்லறந் தழைக்க வாற்றியே
பாங்குறு முயர்தனம் படைத்த கங்களித்
தோங்கிவாழ்ந் திடுகபல் லூழி வாழியே. (13)

வாழ்க ராமைய மாதவன் பொன்னடி
வாழ்க ராமைய மாதவன் றொண்டர்கள்
வாழ்க ராமைய மாதவன் றன்கதை
வாழ்க மாக்கதை யோதுமெய் மாந்தரே. (14)

வாழ்க வையகம் மாமறை யாகமம்
வாழ்க வென்றுஞ் சிதம்பர வண்மையோன்
வாழ்க வென்றும் வயிரவ வள்ளலும்
வாழ்க பூம ணகரமும் வாழ்கவே. (15)

கும்பாபிடேகப் படல முற்றியது.

ஆகத் திருவிருத்தம் 292.

ஸ்ரீ மிளகாய்ச் சுவாமிகள் புராணம்
முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.